ஒடுவாசல்களொன்பதுடைத்தாயூனுகிவகுத்தசிறைக்கே
முடியாதிடுவேதனைபாரீர் மூலத்தனுகாதமைபாரீர். (௯)
மங்கும்பிறவிக்கடன்மாயமதியென்னுமரக்கலமேற
வெங்குங்கரையானமைபாரீ ரிமைப்பிற்பவமற்றமைபாரீர்.
அல்லற்றுவரும்பகலற்று வயலற்றறிவேவடிவாகிச்
சொல்லற்றளகின்றமைபாரீர் சுகமேவடிவானமைபாரீர்.

அதிசயப்பார்வை முற்றுப்பெற்றது.

---

## ௯௫ - வது அவனே நான்.

# இது சிவப்பிரகாசசுவாமிகளது.

---

கலிவிருத்தம்.

என்னையிப் பிறவிக்கே யிடைந்திடந் திடுவேனைப்
பொன்னையொத்திலங்கும் பூமச்சோதிகழல்சூட்டா
மின்னியொத் திடித்தாற்போல்வினையெல்லாமறுத்த
வன்னையற் புதங்கேளா யவனேநா னானேனே: [பி

அலைவாயில் வடுப்போலே யலைந்தலைந்தொருக்காலு
நிலையாத பிறவியை நிலைசெய்த படிகேளாய்
தலையாரப் பெருஞ்சோதி தாளிணை தரித்தபி
னிலையாதங் கழிவில்லா வவனேநா னானேனே. (௨)

ஆடிதை யமாவாசி யலைகட லாடியுந்
தேடியு மோடியுந் திரிந்தேதுங் கண்டிலேன்
கூடிய வந்நாளிற் குளைகழ றரித்தபி
னோடியே தேடி யவனேநா னானேனே. (௩)



பாஞ்ச பவுதிகமாம் பரிணாம வுபாதிக்கே
மாஞ்சேத மறியாதே மயல்கொண்டு திரிந்தெங்கு
மோஞ்சேனைப் பெருஞ்சோதி யுணர்வேயென் றுண
வாஞ்சேயா னந்தமா மவனேநா னானேனே. [ர்த்திட

கற்பனை தவமென்று கலைவீசு மாந்தர்த
மூற்பனக் குழியிலே யுழைத்துணர் விலியேனை
நிற்பன திரிவன நீயேகா ணெனச்சொன்ன
வற்புதங் கண்டபி னவனேநா னானேனே. (௫)

தோன்றிய வுடலுக்குந் துரகமா மனத்துக்குஞ்
சான்றாகிச் சலியாதே நின்றதற் சுருபத்தை
யூன்றவென் மனத்திடை யுத்தம னுரைத்தபின்
றான்றேசஞ் சலமின்றி யவனேநா னானேனே. (௬)

செறிவான வடிவினைச் சிப்புரு டோத்தம
னெறியான மறையாலே நேதிநேதி யென்றுபின்
பிறியாத பேரின்பப் பிரமமே நீயென்றென்
னறியாமை தவிர்த்தபி னவனேநா னானேனே. (௭)

பண்டைநான் முகனாரும் பரந்தநல் லுலகமுங்
கண்டவை நாமென்று கழித்தவர்க் கருள்செய்தான்
விண்டலர் பொழில்சூழும் வீரையந் தனையவன்
றண்டமுநீ யென்ன வவனேநா னானேனே. (௮)

ஓராமை யேமூல மூலகுக்கென் றுணராதே
பேராசை யுள்புக்குப் பிரமித்துத் திரிவேனை
வாராயென் றருள்செய்து மறைசொன்ன பிரமமு
மாராயி னீயென்ன வவனேநா னானேனே. (௯)

அடியொடு முடிவினை யாராயி னிலையாகுங்
குடியொடு பதிகுலங் கோத்திர சூத்திரச்
செடியினை யறுத்திட்ட சீபுரு டோத்தம
னடியிணை சேர்ந்தபின் னவனேநா னானேனே. (க௦)

போதுக்கு மொளியான பூமநற் சோதிதன்
பாதத்தேப்ணிமாறத்தொடுத்தசொற்றொடைபத்துங்
கோதற்ற மனத்தார்கள் குருபர னருளாலே
வாதற்ற பிரமமே வடிவாகி யிருப்பாரே. (கக)

அவனேநான் முற்றுப்பெற்றது.

---

கூசு - வது

## அவித்தியாப்பிரலாபம்.

எண்சீர்க்கழிநெடிலடியால்வந்த ஆசிரியவிருத்தம்.

அறிவென்றே ராண்மகனு ரளவையறி யாதே [ந்தே
யவிச்சையெனும்பேதையேனுமவர்க்குமுன்னம்புகு
நெறிநின்று நெடுநாளெல்லா மென்னோடே நல்கி
நேயமெனும் விலக்கமுமாய் நின்றதற்குப் பின்பு
பொறியைந்தும் புலனைந்தும் பூமிமுத லைந்தும்
புந்திமன மாதிநாலும் புரியும்வாயு வைந்து
மெறிகின்ற விருபத்து நால்வரையும் பெற்றே [டே.
னென்னைவிட்டாவிளையாளோடேபோனார்காணுமாண்
பொய்யான வுறவாலே புத்திரரு முண்டாய்ப்
பூமிதனி லென்னைப் புறப்படவே புகுந்தேன்



மெய்யான வுறவாலே மிக்கவளை விரும்பி
வீடுகெட்டு விளைவுகெட்டு வேற்றுடம்பேயானார்
ஐயோவிவ்வார்த்தைதனைச் சாற்றலாவதொன்றோ
தம்பாவ மனைத்தினையுந் தள்ளிவிட்ட தன்மை
யையோவிவ் வாண்மகனு ரவளைவிடா ராண்டே
யவிச்சைகுல நசித்தாலன்றி யவளைவிடா ராண்டே.

என்னைமணம்புணர்ந்தநாளே யிரட்டைவளையிட்டா
னேகனு யிருந்தவனே யனேகனுமிங் கானு
னன்னைசொல்லை மறுப்பானோ ராங்காரன் பிறந்தா
னந்தரமே யவர்க்குநல்ல வாசையையும் பெற்றேன்
பின்னைவிச்சைபுகுந்ததற்பின்பேர்த்திடவுந்தவிர்ந்தான்
பேதையேனுமிவர்க்குச்செய்த பிழைகண்டிலேனிதன்முன்
முன்னமிவ னெனக்குச்சால நல்லர்கிட ராண்டே
முகமாய மிடுவதன்மு னல்லர்கிட ராண்டே. (ங)

சாந்தியொடு தாந்தியெனும் பாங்கியர்கள் சூழத்
தற்பரமா மறிவினொடே சமாதியிலே புகுந்தான்
போந்திடுதல்பறைந்திடுதல் பிரிந்தொருகாற்பாரான்
பிச்சியெனப் பிதற்றவிட்டுப் பேசாதே யிருப்பன்
றேந்திரியேயமையாதோ செகத்தினுள்ளீரெனக்குச்
சிலவரோடே யோரஞ்செய்து சீவிப்பதிற் காட்டி
லோர்ந்திடிவிங்குரைக்கலாவதொன்றுமில்லையாண்டே
யோமென்னும்பெருந்தீயில் வீழ்வதல்லாலாண்டே.

அருவாகி யிருந்தவருக் கென்னோடடை யடைவா
லகிலமெல்லாம் படைத்தளிக்கு மாண்மைதனைக்கொடுத்தே
னொருவராலு முடியாத வுதவிதனைச் செய்தே
னொருநாளென் குடிலகத்தி னடந்தாலோடிப் போவ

ரிருவர்புக்கார்க்கிதற்குமுன்ன மிவைகண்டதுமில்லை
யென்னுடையபொறையினாலே யிதுநாளிங்ஙனடங்தேன்
புருடரிவராகையாலே பொறுத்தேன்காணுமாண்டே
பூண்முலையாரிவைகள்செயப்பொறுப்பரோதானண்டே.
எங்குமெங்கு மிவர்க்குநல்ல வின்னமிழ்தாயிருப்பே
னிகலோக பரலோக மென்னதல்லா லில்லை
யங்கங்கே வற்றையுண்டிட் டவளோடே யிருப்ப
ராண்மகனார் செய்யுங்குண மாற்றலாவ தொன்றோ
கொங்கைநல்லா ளிடுமருந்தாற் குணமிலியுமானான்
கொச்சையேனு மிச்சித்தக்காற் கூடலாவதுண்டோ
வங்கணொன்குடில்வாயிலயர்த்தார்காணுமாண்டே
யவர்க்கிளையா ளந்தரங்க மானாள்காணு மாண்டே.௬
அத்தலைக்கு மித்தலைக்கு மொத்திருக்கச் செய்தே
யாண்மகனார்க்கொருதவசி யறிவுசொலப்புகுந்தா
ரித்தலையி லுறவறுத்தா ரிளையவளைக் கொண்டே
யிதுவுமென்றன்விதிவசமோவென்றிருந்தேன்சிலநா
ளத்தலையி லுறவினையு மப்படியே யறுத்தா
னாண்டிசெய்தவழகுதன்னை யார்க்குச்சொல்லுவேனான்
றொருத்தறுத்துச்சோதிவடி வாக்குவாரேபெண்ணே
சோதிக்குளே நாமும்புகத் துரியமில்லைகாணே.(எ)
சாக்கியாகி யவரங்ஙன் சலியாதே யிருக்கச்
சகமனைத்துஞ்சந்நிதிக்கேசாய்ச்சுகொடேபோந்தேன்
பாக்கியமில் லாமையாலே பயல்களையும் பாரான்
புசித்தாலும் பயிக்கம்பண்ணப் பார்த்துக்கொடே யிருப்பன்
வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாத நிலத்தே
மறையவளைக்கொடுபுக்கே வைச்சுக்கொடேயிருப்ப
னக்கினரோ யறிப்பாரானற் றடுக்கலாமோவாண்டே
யடையக்குலநசிப்பதிங்ங னறிந்தோமேயாண்டே.அ



ஆன்றிவன் வசத்தினொடு சத்துமல வாகி
யாண்மகனார் வெறுத்தவன்றே யகிருபதி யானே
னின்றெனக்குச் சனித்தனவு மிப்படியே யானு
லேந்திழையீ ரென்சொலுவே னிந்தக்கேடு தனக்கு
வொன்றிடினுலகுதனிலொருத்தியைப்போலிருப்ப
னேருபாயங் காணேனு னுணர்வுபுக்க பின்னை
யென்றுமிளை யவளைப்பார்த் திடுவர்காணு மாண்டே
யென்னைக்கடைக்கண்ணாலும்பாரார்காணுமாண்டே.
அச்சட்டையா லன்னமேறி யகிலமாக வென்றிட்
டன்புடையகுணத்தினாலே யகிலமெலாம்படைத்தா
னுச்சட்டையாற் புள்ளையேறி யுலகமெலாங் காக்கு
மொளியுடைய குணத்தினாலே யுவமையிலியானா
மச்சட்டையா லெருத்தையேறி யுலகமெலா மாள
மாயக்குணந் தானான வள்ளலெனைப் பாரா [ண்டே
னெச்சட்டையாலுணர்வுதோன்றி யுண்மையானார
யோழுமிட்டுத்துரியமாக வுணர்ந்தார்காணுமாண்டே.

அவித்தியாப்பிரலாப முற்றுப்பெற்றது.

---

௩௭ - வது

## * பாண்டியுரைவாரம்.

குறள்வெண்செந்துறை.

எற்றப்பானைபோலிவ்வுடலை, யென்றுமென்றுநீரி
ற்றோய்த்தக்காலும், பேர்த்துப்போர்த்துமிது வூத்தை
யன்றோ, பேதமறுத்திடவற்றோ சொல்லீர். (௧)

* பாண்டியுரைவாரமென்பது-பாண்டித்தியவுரையாம்.

அல்லலுடலைக்கழித்து, அறிவேவடிவென் றுணர்ந்திருப்பார்க்குச், சொல்லக்கட்டவதொன் றுண்டோ, சுருதிகடேற்றி யளவிறந் தத்தை. (௨)

கானலை நீரொன் றுணர்ந்து, கரையுந்திரையு நுரையுங்கண்டாற்போற், றானல்லாவூனைத்தானாக்கிச், சாத்திர கோத்திரஞ் சாற்றுகின்றாரே. (௩)

புத்திவிகற்பத்தைவிட்டுப், போதம்வடிவென் றுணர்ந்திருப்பார்க்கு, மித்தனை கூத்தாடல் வேண்டுமோ, விரவியுதித்தா லிருள்போ மிடத்து. (௪)

பரிதியொருவ னுதிக்கப், பலகோடி யண்டங்கள் பேதமானாற்போற், சுருதிமுடிவி னுதிக்கச், சொல்லும்பொருளுந் துலங்கிடுங்காணே. (௫)

பாத்திரபேதத்தினாலே, பலகோடி யிரவிகள்பேதமானாற்போ, னேத்திரமான பிரம, நிகரிற்பிரபஞ்சமுமாயுதித்தானே. (௬)

மதியைக்குறிப்ப திலக்காய், மாமரத் துச்சியைக் காட்டினாற்போற், பதியைக்குறிப்ப திலக்காய்ப், பஞ்சகோசச்சட்டை சாத்தினாரே. (௭)

செகத்தெங்கு நிறைந்தவச் சிவனார்தம்மைச், சிந்தையிலன்றித் தெளிவுறார்காண், முகத்தைமுகத்தாலேகாணலாமோ, முன்கையிற்கண்ணாடி தாமொழிய.

ஊனிலேயொன்பதுவாசல்விட்டங், கொருவனைக் காவலிருத்திவைத்தவ், வூனிலொருவனும் போனவாறே, யொன்பது வாசலு நாய்புகுங் காணே. (௯)



ஓங்குமுடியைத் தலையில்வைக்க, வுலகமெல்லாமரசாளு மாப்போ, லாங்காரந் தனையறிவோடேகூட்டி, வகிலமுநாமா யிருக்கலாமே. (௧௦)

நெஞ்சிலேகட்டை யடுக்கவிட்டு, நீட்டிநிமிர்ந்து கிடப்பதன்முன், னஞ்சையுமுள்ளே யடக்கிக்கொண்டே, யானந்தமாயறி வாகவல் லீரே. (௧௧)

அம்மையு மப்பனுங் கண்டிருக்க, வந்தக னுருயிர்கொள்வதன் முன்ன, மும்மையுமூனையும் வேறதாக, வுள்ள பொழுதே யுணரவல்லீரே. (௧௨)

மக்களுங்கத்த மனைவிகத்த, மாய வுடலெரி கொள்வதன் முன்ன, நிட்களமான வறிவுதன்னை, நும்வடிவாக நினையவல்லீரோ. (௧௩)

இருவினைப் பாசங் கழுத்தினிலிட், டேற விறங்க விழுப்பதன் முன்னங், குருவினைச் சென்று பணிவீராகிற், கோதி லறிவோடே கூடலாமே. (௧௪)

போத வடிவுதனை மறந்து, பூமிக்கேவந்து பிறந்தவாறே, தாதர் தவசியென் றேசிச், சங்கேதித் துத்தம் வடிவிழந்தாரே. (௧௫)

தன்மயமான வுணர்வயர்த்துத், தாணியில் வந்து பிறந்தவாறே, யென்மகனென் றெடுத்துக்கொள்ள, யானுன் மகனென் றிசைந்திருந்தாரே. (௧௬)

தனையுமிரண்டுள தண்டொன்றத்தைத், தாமேயிடுவாருந் தாங்குவாருங், கனையும்படியறி யாமையாலே, காவித்திருந்தவா கண்டுகொள்ளீரே. (௧௭)

வானாதிபூதங்க டோற்றுகைக்கும், வான்கருத்தும் புலன் ரேற்றுகைக்கு, முனாதிபேதங்க டோற்றுகை க்கு, முண்மையு மாயுணர் வாயிருந்தானே. (கஅ)

போது புலர்ந்து புகுந்தனையும், புத்தியை யெங் கேனும் போகவிட்டுத், தூதுவர்வந்து புகுந்தவாறே, துடைகள் பறக்கத் தொடங்கி னாரே. (ககூ)

கொத்து முதலியொருவ னுள்ளனவன், கொள்வ துமில்லைக் கொடுப்பது மில்லைப், பத்துக் கூலிபத்து ச் சேவகருமவன், பார்வையா லேபடை யாயினாரோ.

கொல்லும் புலிபோ லுயிர்பருகுங், கூற்றத்தின் வாயிற் குறுகிடாதே,சொல்லுமனமு மிறந்துநின்ற, சோதிரா மென்று சுகிக்கவல்லீரோ. (உக)

பாண்டியுரைவார முற்றுப்பெற்றது.

---

கூஅ - வது

## பார்ப்பானும் பறைச்சியும்.

குறள்வெண்செந்துறை.

அன்னமயமீதுடம்பே யறிவானந்தபோதமேயெங்கு
மென்னைபிராமணனீரேயேறப்போவென்குதிங்காணை.

சோதியாய்நின்றதிங்கொன்று சொல்லுமுடம்பிதுசோறு
சாதியாய்நின்றதிங்கேது சாயப்போவென்குதிங்காணை. (உ)

பூண்டவுடம்பிதுபூதம் பரிபூரணமானதுபோத
மாண்டேபிராமணனீரே யகலப்போவென்குதிங்காணை. (ங)



சுக்கிலஞ்சோணிதமன்றித் தோற்றுங்குலமுண்டோசொல்லீ
ரெக்குலநல்லதென்னாதே யேறப்போவென்குதிங்காணை. (ச)

இறைச்சியெலும்புதோலன்றி யெனக்குமுனக்கும்வேறு
ண்டோ,பறைச்சிபோவென்னாண்டாய்பார்ப்பான்பண்டேநீ
பேய்கொண்டாயாதே. (ரு)

இருவருமொருவழிபோகச்சேயேறப்பாராப்பார்ப்பானெ
னைவிலங்கென்று, னிருவர்விலங்கிலும்வழிவிலங்கா தென்
றேனெத்தாலென்றானுமத்தாலென்றேன். (சு)

உடலுக்குடல் பொய்யல்லவொன்றோ யுண்ணின்றசோதி
விலங்கவொன்றோ, வடலைப்பிராமணனீரே யகலப்போவெ
ன்குதிங்காணை. (எ)

பார்ப்பானும் பறைச்சியும் முற்றுப்பெற்றது.

---

கூகூ - வது

## பறைச்சியும் பறையனும்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பரமான மதுவுண்டு பரவசனாம்படி
பாதங்க டலைந்தா ராரேடா பறையா
வரமான குணமூன்று மழியவே யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (க)

மெய்ஞ்ஞான மதுவுண்டு மெய்ம்மறந் திருக்கவே
மேலான பதந்தந்தா ராரேடா பறையா
வஞ்ஞானமழியவே யறிவினை யருள்செய்த
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (உ)

எண்ணிறந்த நரம்புகளு மிறைச்சிகளு முடைய
விந்திரியப் பொந்திரிய வழித்தாரார் பறையா
கண்ணெதிரேயெழுந்தருளிக்கலியுகத்தின்றெடுத்தக்
கரையேற விட்டாரென் றறியாயோ பறைச்சி. (௩)

ஏற்றத்தாழ் வின்றி வரம் பொன்றுங் காணுமே
யெங்கும் போதவெள்ள மாவானேன் பறையா
வாற்றைத் தலையிலே தேக்கினான் காலிலே
யடைய வொதுக்கினேன் காணேடி பறைச்சி. (௪)

சோதிமந் திரமுண்டு சுகியாமே சுகிக்கின்ற
வாதிமந் திரந்தா ராரோடா பறையா
வாதியந் தமுமில்லா வறிவானந் தத்தேவர்
பாதமென் றலைதந்த தறியாயோ பறைச்சி. (௫)

தன்னைத்தா னறியாத சாதியை மிகவுண்ணத்
தாளிணை தலைமிசை தந்தாரார் பறையா
யன்னத்தால் வருங்கோச மறுவன் றென்றிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௬)

கருமறை யும்படி திருமந் திரமுண்டு
களிக்கவே பதந்தந்தா ராரோடா பறையா
வருமறை முடிவிலு மறியவொண் ணாதிடு
மானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௭)

ஊனைக் கழித்தன்மை யூமந் திரமுண்ண
யுபதேசந் தந்தவ ராரோடா பறையா
வானைக் கருள்செய்ய வன்றுவந் துதவிய
வானந்த நாடனென் றறியாயோ பறைச்சி. (௮)



இருவினை யான்து வேரறப் பார்த்துன்னை
யிப்பிறப் பறுத்தவ ராரேடா பறையா
சுருதிக டேடியு மறியவொண் ணாதவத்
துய்யநற் சோதியார் காணேடி பறைச்சி. (௯)

அன்றான வறிவுதந் தறியாமை தனைப்போக்கி
யகம்பிரம முனக்களித்தா ராரோடா பறையா
குன்றாத மெய்ஞ்ஞான நன்றாக வருள் செய்யுங்
கோதில்சுக வப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௦)

சாதிகுல பேதமறச் சங்கை யறத்தெரிந்து
சந்தான வுபதேசந் தந்தாரார் பறையா
நீதியினு லுணர்வேயாய் நித்தசுத்த மாகிய
நின்மலனு மப்பனென் றறியாயோ பறைச்சி. (௧௧)

குன்றாத மெய்ஞ்ஞானங்கொணர்ந்துனக்கருள்செய்
கொன்றான வுண்மையையுரைத்தாரார் பறையா [திங்
சென்றார்தம் போதத்தைத் தெளிவுறக் கண்டிடி
லன்றாயு மவனென்றிட் டறியாயோ பறைச்சி. (௧௨)

பறைச்சியும் பறையனு முற்றுப்பெற்றது.

# ௧௦௦ - வது சாற்றுபறை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொன்னையொழி யச் * சவடி காறையிலை யாற்போற்
புவனங்கள் பதினாலு மிருந்தபடி பார்க்கி
லென்னையொழி யப்புவன மேதுமிலை யென்றிட்
டிரவுபக லனவரத மறையுமேடா பறையை. (௧)

* சவடி இத்தேசத்தில் சவளியென வழங்குகின்றது.

ஆங்கார வன்னியறை யரசழியப் பொருதிட்
டவருடைய மைந்தரையு மறவச் சிறைவைத்து
வோங்கார வடிவான துண்மையதே யென்றிட்
டுலகுதொறு மோர்யாதே யறையுமேடா பறையை. உ

இயமமென நியமமென விரட்டைமதி விட்டு
விதயபுண்டரீகமெனு மில்லதனுக் குள்ளே
யயனைமுத லமரரெலா மடிகள்பணிந் தேற்ற
வறிவுகிடு ராசரசென் றமையுமேடா பறையை. (ரு)

ஊனைவடி வாகவுண ரும்மதியை விட்டு
வுண்மையுண ரும்மதியை யுள்ளுறவே நிறுத்தி
ஞானவடி வானவனை நானவனே யென்று
நாடோறு நாடோறு மறையுமேடா பறையை. (ச)

ஏதுமலா வறிவதனுன் யான்மறையோ னென்றிட்
டெருதுபோ லேயாகா திகன்மதன்ம மெடுத்துப்
பேதமெனும் படுகுழியில் விழுந்துபல பிதற்றும்
பித்தனையு மறுத்தோமென் றலையுமேடா பறையை.

எடுப்பதொன்று மிடுவதொன்று மன்றுகிடர் பிரம
மேழைச்சன முழன்றறுக்கு மாயத்தானம்போலே
கொடுப்பதொன்றுங் கொள்வதொன்றுமன்றுகிடர்பி
கோதிலறிவானதென்றறையுமேடா பறையை. [ரமங்

அறிவான வடிவுதனை யறியாமை மறைத்திட்
டகமனித னென்றிடுமவ் வவமானங்கழிய
வெறியான வறிவுதரு நின்மலனு ரருளா
னித்தசுத்த மானேனென் றறையுமேடா பறையை.



வானாதி பூதமெல்லா மாயையாலே வளர்த்து
வடிவுதொறு மறிவாகி வளர்வுகுறை வின்றித்
தானேயா யுலகனைத்துந் தன்னில்வே றில்லைத்
தான்சேரா னுலகமென்று சாற்றுமேடா பறையை.

பொய்யாய மாயையினைப் புவனமுழுதாக்கிப்
புத்தியெனு மந்திரத னேடுபுவி யாள
மெய்யாய வறிவுகிடு ராசாள்வ தென்று
வீதிதொறும் விளங்கிடவே யறையுமேடா பறையை.

புகழிலங்கு மறிவானும் பூமச்சோதி யருளாற்
புவனங்கள் பதினாலும் பொய்யெனவே யுணர்ந்து
துகளின்மறைத் தமிழ்மாலைபத்தினையுந் தொடுத்துத்
தோளின்மிகச் சாத்தினேனென்றறையு*மேடாபறையை.

சாற்றுபறை முற்றுப்பெற்றது.

---

## க0க - வது திருவுந்தியார்.

கலித்தாழிசை.

அஞ்ஞான காரிய மனைத்தையு மறவிட்டு
விஞ்ஞான மானேனென் றுந்தீபற
வெளியாகி நின்றேனென் றுந்தீபற. (க)

முடியாத பிறவிகண் முடிந்திட மாயையைத்
துடியாம லறுத்தோமென் றுந்தீபற
துரிசற்று நின்றேனென் றுந்தீபற. (உ)

போதத்தை யுணராதே பொல்லாத மாயையாற்
பேதத்தை யுணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற. (ரு)

---

* ஏடர்களென்பது ஏடாவென பன்மையொருமையாய் வந்த வழுவமைதி.

முன்செய் தவத்திலே முயன்றவப் பெருமையாற்
பின்சாதி கழிந்தோமென் றுந்தீபற
பிரமமே யானேமென் றுந்தீபற. (ச)

அதுவேகர் ணிதுவென்றா னாரியனருள்செய்ய
விதுவது வாகுமென் றுந்தீபற
விலக்கணை புகுந்ததென் றுந்தீபற. (ரு)

தொம்பதந் தனிலுள்ள துகளினை யறுத்தக்காற்
றம்பத மறிவேயென் றுந்தீபற
தாக்கற்று நின்றோமென் றுந்தீபற. (சா)

தற்பதந் தன்னிலுஞ் சபளத்தைக் கழித்தக்கா
னிற்பது போதமென் றுந்தீபற
நீக்கியோன் றில்லையென் றுந்தீபற. (எ)

அசிபதந் தனக்குள்ளே யவனேகா ணிவனென்ன
வுசிவத்தொன் றானேமென் றுந்தீபற
வொழிவற நிறைந்ததென் றுந்தீபற. (அ)

பாக்கியத் தாலேநாம் பழமறை மொழிந்திட்ட
வாக்கியங் கேட்டோமென் றுந்தீபற
வரவுபோக் கற்றோமென் றுந்தீபற. (கூ)

அக்கண மறிவாக வடியிணை தருவார்க்குத்
தெக்கணை காணோமென் றுந்தீபற
செய்வதொன் றில்லையென் றுந்தீபற. (க0)

* உந்தி பறபெண்கா ளுந்தீபற
வுணர்வோரா மானோமென் றுந்தீபற.

திருவுந்தியார் முற்றுப்பெற்றது.

* உந்திபறபெண்காளென்பது-ஒருமை பன்மையாயவந்த வழுவமைதி.

உ

சிவமயம்.

# க0உ - வது அநுபவமாலை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பொங்கு கானல் புனலாய வண்ணமும்
போத மேபேத மாகி யதுபுரிந்
தெங்கு நாமறி வாகி யிருந்ததா
லீதென் றீதென்றன லாவ துண்டோ. (க)

சமய மாறுக்குஞ் சத்தா மொளியதாய்ச்
சாக்கி யாகி யிருந்த விடத்திலே
யமையு மாசை யவற்றிற் பிதற்றைவிட்
டாறி னாருக் கலைந்தலை தானுண்டோ. (உ)

அஞ்சு கோச வரணை யழித்திட்டே
யானந்த வறி வாகிய வாசையும்
வஞ்ச மாகு மதுவிட்டு வாழ்வார்க்கு
மாய வாழ்வை மதிப்ப தினியுண்டோ. (ங)

கலவி யென்பதோர் கட்டை யறுத்துக்
காமன் வாழுங் கருக்குழித் தூர்த்தே
யலையிலா வுணர் வாயிட் டிருந்தா
லமரர் வாழ்பதி யிற்புக வுண்டோ. (ச)

காம கோபப் பெரும்புலி வாழுங்
கன்ம காண்ட மெனுங்காடு வெட்டி
யோமே னும்பொரு டன்னை யுணர்ந்தே
யுண்மை யானார்க் கொருகுறை யுண்டோ. (ரு)

தோற்று மாயத் துவக்கையறுத்துத்
துய்ய போதச் சுகத்தினை யுண்டு
காற்றி லாவிடங் கண்டிட் டிருந்தாற்
கற்ப னையின் கருத்தழி யாதோ. (௬)

வான ழிந்து மகானு மழிந்து பின்
மாயை தானு மழிந்து வழக்கற
நான ழிந்துபின் ஞானது வானு
ஞானெ னன்பதோர் நாசந்தா னுண்டோ. (எ)

சுருதி யந்தமாஞ் சுத்த சுகத்தைச்
சோம்பை விட்டுச் செவியாரக் கேட்டு
யிருதி யாற்றெளி வாக வுணர்ந்தான்
மீண்டுபோ தென்னும் வேதனை யுண்டோ. (அ)

எரியின் முன்னவ நீத மதுபோ
லெல்லா மேகபோ தத்தி லுருக்கிச்
சரிவி லாதச்ச சித்தா யிருந்தாற்
றுமியா மென்னுந் தங்குத லுண்டோ. (௯)

போக்கி னோடு வரவு மிறந்து
பூரண போதம தாகிப் பொலிந்து
வாக்கி னோடு மனமு மிறந்தால்
வாசகஞ் செய்ய லாவதொன் றுண்டோ. (௧௦)

அனுபவ மாலை யையி ரண்டையு
மத்தன் பூமனற் சோதிதாள் சாத்தி
யுனு பவவழி மாள வுஉரைத்த
வொப்பி லாதார்க் கொருகுறை யுண்டோ. (௧௧)

அனுபவமாலை முற்றுப்பெற்றது.



சிவமயம்.

## ௧௦௩. வது அறிவு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

போகாத மாயையைப் போக்கிட லாவதும்
புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ. (௧)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும்
யாவையு மென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலே மென்றிட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ. (௨)

மோகாதி யெல்லா மறிந்திட லாவது
முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ. (௩)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது
மேகாந்த மாகி யிருந்திட லாவது
மந்தக் கரண மறுத்திட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ. (௪)

நற்செய் தவங்களு மற்றிட லாவது
நானென்னு மாங்கார நச்சற லாவது
மற்றவை யெல்லா மறவிட லாவது
மறிவே வடிவா யிருந்திட லல்லவோ. (௫)

அறிவுமுற்றுப்பெற்றது.

௳

சிவமயம்.

## ௧௦௪-வது * தச்சராண்டு.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

என்னை யறியா வறியாமை போயிட
வேகமா யின்ப மெனக்கே யருள்செய்து
பின்ன மில்லாத பிரமநீ யென்றிடப்
பேச்சற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா. (௧)

கண்ட கருக்குழி மாளும் படிக்குக்
கருணையி னற்கலந் தாண்டு கொண்டு
பண்டை வடிவது நீயாநு மென்றிட்டுப்
பார்க்கப் பரமா யிருந்தோமே யப்பா. (௨)

கருதும் பொருளிவை யெல்லா மெல்லாங்
கானவி னீரென்று சொல்லிச் சொல்லி
யொருவ னுணர்த்த வுணர்ந்துங் குணர்ந்தவ்
வொப்பற்ற மெய்ப்பொரு ளானோமே யப்பா. (௩)

தப்பா மறைப்பொரு ளென்னை முன்னைத்
தானே யெனக்குத் தலைவ னளித்திட
வொப்போத மில்லா வுணர்வோநா னைமின்
னென்றிய மெய்ப்பொரு ளானோமே யப்பா. (௪)

பேதப் பிணக்கற வெண்ணி யெண்ணிப்
பேராத துன்பப் பிறவி யறுத்திடும்
போதப் பொருளே யுணர்த்த வுணர்த்தப்
பொய்யிலா மெய்ப்பொரு ளானோமே யப்பா. (௫)



தேடுந் தனமுந் திடமாம் பிராணனுங்
கூடு முடலுங் குருபர னுக்கென்று
பாடு மறையின் படிபரன் கைக்கொள்ள
நீடும் பரமாகி நின்றோமே யப்பா. (௬)

தோற்று முலகவை யெல்லாந்
தோற்ற திருக்குஞ் சுகமேவடி வென்னப்
பேற்று மூன்றையுங் கடந்து நடந்த
பிரமமே காமா யிருந்தோமே யப்பா. (௭)

அத்தி கிரியிலு மன்ப ரறிவிலு
மாதி யருளாளர் தாமா யிருக்கவே
யெத்திசைக் கேதெய்வ முண்டென்று சொல்லிடு
மேழையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௮)

அண்ட மனைத்துமாய் நின்ற பரனார்த
மாகம வாக்கியந் தன்னை யுணராதே
பிண்ட மதனையே நானென்று பேசிடும்
பேதையர் தங்காசு கொள்ளோமே யப்பா. (௯)

கூடும் பரனுங் குருபரன் பாதமே
நீடு மடியவர் நெஞ்சத்து னின்றிடத்
தேடுந் தனமுஞ் செகமுந்தான் மெய்யென்று
நாடு மவர்காசு கொள்ளோமே யப்பா. (௧௦)

தச்சராண்டு முற்றுப்பெற்றது.

* தச்சராண்டென்பதோர் கூட்டம்.

உ

சிவமயம்.

# கOரு-வது பாம்பாட்டு.

குறள்வெண்செந்துறை.

ஆதியு மந்தமு மேது மில்லா வறி
வானந்தத் தேவ ராணை யாணை
சோதியுட் சோதிா மானே மென்று
சுருதிகள் பாடநின் ருடாய் பாம்பே. (க)

சுருதியுங் கருதிடாச் சுகமேகா ணீயென்று
சொல்லாதே சொன்னவ ராணை யாணை
கருதிய வுலகினிற் கற்பனைக ளெல்லாங்
கானலி னீறொன்றே யாடாய் பாம்பே. (உ)

ஆங்கார மோகங்க ட்ரமே கழிய
வடியிணை சூட்டின ராணை யாணை
யோங்காரத் துட்பொரு ளாகி நின்ற
வுண்மைநா மானேமென் ருடாய் பாம்பே. (உ)

நாரிய ரென்னும் வலையிற் பட்டு
நானென தென்னு கருவ றீர
வாரியன் வந்தடி வைத்த போதே
யானந்த மானேமென் ருடாய் பாம்பே. (ச)

மனமுத லான் கரண மெல்லா
மாய வருள்செய்தா ராணை யாணை
னனவிலுங் கனவிலுஞ் சுழுத்தி யிலு
நானேதா னானேனென் ருடாய் பாம்பே. (ரு)



கடையிற் சரக்கினைக் கண்டு நான்போய்க்
காதலித் தெங்குங் கழிந்தி டாதே
மடியிற் சரக்கினைக் காட்டித் தந்த
மாமறை பாடநின் ருடாய் பாம்பே. (சு)

ஒக்கலைப் பிள்ளை யுடனி ருக்க
யூரெங்குந் தேடி யுழலு வேனை
யக்கணம் பிள்ளையைக் காட்டித் தந்த
வாசானைப் பாடிநின் ருடாய் பாம்பே. (எ)

சந்திக டோறுங் குடைவி ரித்துத்
தப்புக்கை கொட்டும் பிடார னல்லேன்
புந்தியுள் ளேயுறப் பார்த்த போதே
போக்கிட மற்றேமென் ருடாய் பாம்பே. (அ)

கோசங்க ளென்னுங் குட்மு ருட்டிக்
குலநல மென்னுங் கொடிய றுத்துப்
பாசங்க ளென்கின்ற பற்கள் வாங்கிப்
பார்ப்பறப் பார்த்தோமென் ருடாய் பாம்பே. (கூ)

அப்பத மிப்பத மென்றி ரண்டி
னாசங்கை தீர்த்தவ ராணை யாணை
தற்பதந் தொம்பதந் தாம்பு றம்பாய்த்
தன்மய மானேமென் ருடாய் பாம்பே. (கO)

பிறவிக ளென்னும் பெருங்க டலைப்
பிறகிட்டுப் போந்தவ ராணை யாணை
திறவிய தேசிகன் சேவடியைச்
சேராதே சேர்ந்தோமென் ருடாய் பாம்பே. (கக)

அஞ்சு முக்முட்டைப் பாம்பி னீரே
யாராயி னும்முக மொன்றே காணுந்
துஞ்சுவ தில்லாத் துரிய நாமே
தோன்றுதே தோன்றிநின் றுடாய் பாம்பே. (கஉ)

பாம்பாட்டு முற்றுப்பெற்றது.

---

## கOகூ-வது நையாண்டி.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆரணந் தேடற் கரியா னொருபையல்
பேராமை காட்டிப் பிறவா தனசொன்னான். (க)
நாரு தனசொல்லி நாண மழித்தென்னைக்
காணுது காட்டிக் கழித்தானு னென்செய்வேன். (உ)
கில்லா வுபாதி கிலேயேநீ யென்றிட்டுச்
சொல்லாது சொல்லித் துவக்கை யறுத்தானே. (ங)
முடிவு நடுவு முதலுமில் லாப்பைய
லடியை நினைவுற வானந்த மானேனே. (ச)
சுருதிக டேடியுந் தோன்றாத பையலார்
கருதிய நீயென்னுக் காலாலே பாய்ந்தானே. (ரு)
வரையொன்றிலாப்பையல் வார்த்தையைக்கேட்டுநா
னுரையொன்றுங் காணுத வுன்மத்த னானேனே. (சு)
எட்டா நிலத்தே யிருப்பா னொருபையல்
கட்டின தெல்லாங் கழித்தானு னென்செய்வேன். எ
பேச்சு முரையும் பிறவு மறுத்தென்னைத்
தோய்ச்சுதிமாளியிலே



விதியாலே காட்டேறி விறகோடே போவேனைப்
புதியானோராண்பிள்ளை போகாய்வாராயென்றான். கூ
கரியாமுடம்போடே கட்டைகொள்ளப் போவேனைப்
பெரியானோராண்பிள்ளை பிறவாதெல்லாஞ்சொன்னான்.
விள்ளேன் விள்ளேனென்று வேண்டிற்றெல்லாஞ்சொல்லி
யுள்ளே கொடுபுக் குடம்பைக் கழித்தானே. (கக)
கருதி யிருக்கினுங் கண்ணுக்கெட் டாப்பையல்
சுருதி முடிவிலே தோன்றினு னென்செய்வேன். கஉ
ஆரணந் தேடற் கரியா னொருபையல்
காரண நீயென்னக் காலாலே பாய்ந்தானே. (கங)
மருவ வடிவில்லான் மானமில் லாப்பைய
லொருவன் கிட்டென்னை யுள்ள மழித்தானே. (கச)
முன்னில்லைப் பின்னில்லை மூலமில் லாப்பைய
லென்னில்லைத்தன்னில்லையென்றானென்செய்வேன்.
சோதித்துப் பார்க்கிலேன் சுருதித் தேறிலேன்
யேதிக்கப் போகாத பிரமநா மானேனே. (கரு)
இட்டடத் தூண்கிலே னேதேனுஞ் செய்கிலே
னெட்டொன்று மில்லாத வுணர்வுநா மானேனே. ()
ஓட்டிலே பிச்சையேற் றுண்பா னொருபையல்
வீட்டிலுங் கொண்டுபோய் வெளியிலேவிட்டானே.
பண்டில்லை மேலில்லைப் பாரீரிப் பையலார்
பெண்டிரோ டென்றும் பிரியா வுணர்வென்னே. ()
கண்டதுங் கேட்டதுங் காணுத போதிலு
முண்டதுங்கொண்டதுமுனக்குண்டோவென்றானே.

பொறியுற் றிருக்கிலென் புலனைச் செயிக்கிலெ
னறிவைப் பிரியாத வானந்த மல்லலேனே. (உக)

நெஞ்சிலே நெஞ்சிலே நிற்பா னொருபைய
லஞ்சு மறுத்தறி வாக்கினு னென்செய்வேன். (உஉ)

கருவை யறுக்கிலேன் கழலிணை சூட்டிலே
னுருவையில்லாப்பைய லுறக்க றவிர்த்தானே. (உரு)

தன்னை யிகந்து தனியே யிருப்பானை
யென்னெனச் சென்றுகா னென்னை யிகந்தேனே. ()

நாட்டார்தாமென்செய்வார்நமனார்தாமென்செய்வார்
வீட்டார்தா மென்செய்வார் வீணே திரிவாரை. உரு

அஞ்சுவ தில்லை யடங்கு வதுமில்லைத்
தஞ்சமில் லாப்பைய றுன்றேன்றி யானுனே. (உசா)

உள்ளத்தி லுள்ளே யுதிப்பானொரு * பையல்
வள்ளலைக் கண்டுகொண் வரவுபோக் கற்றேனே. (உஎ)

ஏதமில் லாப்பைய லென்னையுந் தானாகப்
போத வுணர்த்திப் புகலு மறுத்தானே. (உஅ)

சரமே கலமாகக் கண்டிட மிரந்துண்டு
பரமே பரமாகப் பற்றறப் பெற்றேமே. (உகூ)

அடியின்றி முடிவின்றி நடுவு மின்றி
யாகாசந் தானின்றி யங்ஙனேயாய்
வடிவின்றி நின்றதோர் வடிவு தன்னை
மறைகளெல் லோர்தேடி மயங்கு கின்னும். (௩௦)

நையாண்டி முற்றும்பெற்றது.

* பையல் - சிற்றாள்.

உ

சிவமயம்.

# கஎ - வது மனம்.

இரட்டைக் குறள்வெண்செந்துறை.

சோராய் மனமேநீ சிற்பரத்தோடே நஞ்சிவனை
யோராமையல்லதுணர்விற்பிறிதொன்றுங்கண்டிலேனே
சொல்லாய் மனமேநீ சொல்லாதிருப்பதென் சொல்லற்றே
வெல்லாம் பிரமமாய்நின்றபி னேதென்று சொல்லுவேன்.
சுற்ற நினைத்தல் கருதுதல் செய்யாய் மனமேநீ
சுற்று மகத்துஞ் சுகங்கா ணினிப்பலசொல்லியென்.
பண்டுபோ லன்றிப் பதைப்பற்றிருந்தாய் மனமேநீ
கண்டதனைத்து மறிவாகக் காணுதே கண்டோநீ. (௬)
ஐயோ மனமேநீ யாராயமாட்டா திருப்பதென்
பொய்யோ முடிந்தது பூரணபோதமே யானுமே.
என்னே மனமேநீ யேவிற்றுச்செய்யா திருப்பதென்
முன்னே கருமத்தின் மூலவவிச்சை முடிந்ததோ.
கோத்தரமவித்தையின் கொத்தக்குலையாய் மனமேநீ
பார்த்தாலனைத்தும்பழுதையிற்பாம்பாய்முடிந்ததே.
அன்னையுமுன்ன மறிவாலறப்பறித் தாட்டினே
னென்னையும் பின்னையிலாமைநிலையிட்டாலென்செய்வேன்.
கரண மனைத்தையுங் கையொக்கப்பாராய் மனமேநீ
பூரணமேயெங்கும்புலனுக்குப்போக்கிடங்கண்டிலேனே
போகாய்மனமேநீ போகாதிருப்பதென் போக்கற்றே
வாகாவிவர்சொல்லும்வார்த்தையேயெங்குமறிவன்றே
கலைகளனைத்தையுங் கற்கிலைகண்டாய் மனமேநீ
யுலைநீர்போல்வெந் தனக்குள்ளேநடா வொளியானேனே.

மனமுற்றும்பெற்றது.

௨

சிவமயம்.

## கஎ௮ - வது செட்டியார்.

குறள்வெண்செந்துறை.

ஓர் திருபல வெண்கல, மொக்க நிறுத்திக் கொடுத்தே ஞன், சேர வொருபல மாக்கினர், செய்யும் படியெனிச் செட்டியார். (க)

எட்டிடை யாலிட்ட தட்டியை, யெல்லோருங்காணக் கொடுத்தேனன், றட்டி நிறுத்தாரிச் செட்டியர், தத்வமசி யென்றார் செட்டியார். (உ)

வீட்டயிருப்பது நாற்பல, வெண்கலத் தாலிட்ட தட்டியை, யோட்டாக மாற்றினர்செட்டியா, ரொருபலமாக்கினர் செட்டியார். (ங)

கடையி லிருப்பாருந் தாமேயாய்க், காணக்கொடுத்த கலமெல்லா, மூடையிநிறுத்தி தொருபல, மூண்மையி தென்றாரிச் செட்டியார். (ச)

என்று முடையாக் கலந்தன்னை, யெல்லாருங் காணக் கொடுத்தேன, ன்றே யுடைத்தாரிச் செட்டிடியர், ரீரறிவா ரென்றார் செட்டியார். (ரு)

உண்டகலங்க ளனைத்தையு, மூரார்றியக் கொடுத்தேனன், கொண்டுநீ யாரென்றார் செட்டியார், கூறுதிகூறினர் செட்டியார். (சா)

ஓட்டைக் கலத்தி லிட்டவிட், வுள்ளசோ றெல்லா மறவுண்டு, வீட்டி லிருப்பாரிச் செட்டியார், வியாபாரமுஞ்செய்யார் செட்டியார். (எ)

செட்டியார் முற்றுப்பெற்றது.

---

௨

சிவமயம்.

## கஎகூ - வது இம்பில்.

கலித்தாழிசை.

ஆதிப் பிரம மறியாமை தன்னாலே
பேதித்துத் தோன்றிற்றென் றிம்பிலடி
பிறப்பிறப் பில்லையென் றிம்பிலடி. (க)

வந்த பிறவியும் வானாதி பூதமு
மிந்திர சாலமென் றிம்பிலடி
யெனக்கழி வில்லையென் றிம்பிலடி. (உ)

ஏகமே யல்லா லிரண்டில்லை யத்விதப்
போகமே யானேமென் றிம்பிலடி
புலன்வழி கெட்டதென் றிம்பிலடி. (ங)

அண்டத்தை யெல்லா மறிவே படைத்தமை
பிண்டத்தே கெட்டோமென் றிம்பிலடி
பேதமற் றில்லையென் றிம்பிலடி. (ச)

பூதங்களைந்தும் புலன்கள் மதினாலும்
பாதத்தே பாய்ந்ததென் றிம்பிலடி.
பரமே பரமாமென் றிம்பிலடி. (ரு)

எறிட்ட சட்டை யிரண்டையு ஞானத்தாற்
கிழிக் களைந்தோமென் றிம்பிலடி
திளைப்பதொன் றில்லையென் றிம்பிலடி. (சா)

மாங்கூடு டுக்கிட மாசாகத் தீண்டிற்றென்
றேங்கா விறந்தானென் றிம்பிலடி
யெல்லா மிப்படியேயென் றிம்பிலடி. (எ)

ஆரியன் வந்திங் கடிதலை வைத்தபின்
பூரண மானதென் றிம்பிலடி
போக்குவர வில்லையென் றிம்பிலடி. (௮)

பின்னு மறையின் படியே பரனைத்
தன்னை யுணர்ந்தோமென் றிம்பிலடி
தத்துவந் தானேயென் றிம்பிலடி. (௯)

இம்பில் முற்றுப்பெற்றது.

## ௧௧௦-வது பந்து.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஒன்றாகி நின்றபே ருணர்வே யுணர்ந்திட்
டோமென்னுங் கரத்தினாற் பந்தாட நின்றேன்
பின்றாதே யென்னோடே பிழைப்பாயோ பந்தே
பேய்த்தேரி னீருண்ணப் போவாயோ பந்தே. (௧)

பத்தியே வளர்கோலப் பட்டினை யுடுத்துப்
பழவினை சரிதையாற் பந்தாட நின்றேன்
முத்தியே வடிவாகி நிற்பாயோ பந்தே
முட்பூவிற் றேனுண்ண முயல்வாயோ பந்தே. (௨)

வாகாதி தொங்கலை வாவலித் தடுத்து
மதனன்றன் வழிமாறப் பந்தாட நின்றேன்
போகாதி யனைத்தையு மொழிவாயோ பந்தே
புரியி லாவாகிப் போவாயோ பந்தே. (௩)

கருதின் முலைமாதர் தோழிமாரரக்ச்
சொல்லொணா நிலத்திலே பந்தாட நின்றேன்
றிருவின்மை யாலறி வாவாயோ பந்தே
தெளிவின்மை யாற்பிறந் திறப்பாயோ பந்தே. (௪)



உலகங்கள் பதினாலு மொருகாலா லடக்கி
யுணர்வேமுக் காலாகிப் பந்தாட நின்றேன்
னலகில்லா வறிவுரு வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மாகி யலைவாயோ பந்தே. (௫)

தேசிகனாடி சென்னிமேல் வைத்துத்
தேச காலங்கெடப் பந்தாட நின்றேன்
வாசியில் லாவறி வாவாயோ பந்தே
மாயா மயமாகிப் போவாயோ பந்தே. (௬)

ஆறு முகமு மடையப் புதைத்திட்
டறிவே முகமாகிப் பந்தாட நின்றேன்
வீறும் வெறுப்பு மறுவாயோ பந்தே
விதியா ரேவற்றொழில் செய்வாயோ பந்தே. (௭)

குணக்குங் குடக்கொடு தெற்கும் வடக்குங்
கோணங் களுமாகிப் பந்தாட நின்றே
னணுக்கவொண் ணாவறி வாவாயோ பந்தே
யங்குமிங் கும்மா யலைவாயோ பந்தே. (௮)

கோசமென் னுங்கழற் கற்றைக் குலையக்
குருபரன் றாள்சூடிப் பந்தாட நின்றேன்
பாச மறுத்தறி வாவாயோ பந்தே
யார்க்கி லில்லாப்பவ மாவாயோ பந்தே. (௯)

எல்லாம் பிரமமே யென்னு மொழியாலே
யானேயா னாகப் பந்தாட நின்றே
னில்லாத வாழ்வை நினைவாயோ பந்தே
நித்த சுத்தம்முத்த மாவாயோ பந்தே. (௧௦)

பந்து முற்றுப்பெற்றது.

௳

சிவமயம்.

ககக - வது

# ஞானகாண்டம் - கன்மகாண்டம்.

---

கலிவிருத்தம்.

அந்தண னாகிவந்தா றங்கமறை யோர்தி
மந்தணங்கள் பேசி மடவாளை மணஞ்செய்து
செந்தழ லில்விட்டுத் தேவரோ டிருக்கின்ற
கந்தறி வாருண்டோ ஞானகாண் டத்தில். (க)

அருக்கனூர் கலங்கடோறு மநேகரா யிருந்தாற்போ
லொருத்தனை யுணராமையா லுல கேழுமாய்ப்
பொருத்தறவுடல்கடோறும்புரைவறப்புகுந்துநின்ற
கருத்தனை யறிவாருண்டோ கன்மகாண்டத்தில். (உ)

தேடிய பொருள்கொண்டு தேவாரம் பலசெய்து
கூடிய செல்வத்தைக் குறைவற விருந்துண்டு
நீடிய வுலகங்க ளனைத்தினு நெடுங்கால
நாடிட விருப்பாருண்டோ ஞானகாண் டத்தில். (ங)

அவ்வறுத் துலகத்தை யநித்தியமென் றறிந்தபி
னிம்மை கெடுவதன்மூ னியமநிய மஞ்செய்து
தவ்வறவானந்த வனுபோக வடிவினைக்
கவ்வறக் கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (ச)

அரசரா யவனிதன்னி லடிதொழ வரசாண்
டிரைசெய வுலகினி லெய்யாருண் டோவென்னப்
பெருசறிவ ராகிப் பிறந்துள்ள பெருமையு
ளார்சுரர் பசுவுமுண்டோ ஞானகாண் டத்தில். (ரு)



பெரியதே சுகமென வருமறை பேசிட
வரியதோ ரனுபவ மகத்திலே யுதித்தபின்
மருவிய பிறவியு மாயையு மாய்வறக்
கருவினைக் கழித்தாருண்டோ கன்மகாண் டத்தில். கூ

வாடாத மலர்சாந்து மதிமுக மடந்தையர்
தேடாத வடிசிலுஞ் சென்றிடச் சேவிப்ப
வீடாசா மரம்வீச வெண்கொற்றக் குடையிட்
நாடாளப் பிறந்தாருண்டோ ஞானகாண்டத்தில். (எ)

கோணாத மனத்தராய்க் குருபர னருளாலே
நாணாத நான்மறைத் தலையினை நிலைகண்டு
பூணாதே யுலகினைப் புரைவறப் புகுந்திட்டுக்
காணாது கண்டாருண்டோ கன்மகாண் டத்தில். (அ)

வானினு மண்ணினு மற்றுள வுலகினுந்
தேனினு மினியபோ கங்களைத் தெரிந்துண்டு
மேனில நிலையென்றும் விதிவேதத் துளதென்று
நானென்று மிருப்பாருண்டோ ஞானகாண் டத்தில்.

செய்தவப் பயனெல்லாஞ் சிறிதென்று சிலதள்ளி
மொய்தவத் தினாலே முத்திக்கே முயன்றிட்டு
மெய்தவத் தினைக்கண்டு வேதாந்தத் திருப்பார்கள்
கைதவ மல்லாதுண்டோ கன்மகாண்டத்தில். (க0)

கொள்ளையா குதியினை யமரர்க்குக் கொடுக்கைக்கே
யெள்ளளித் தெசமானு மெட்டுப் பெயரோடே
சள்ளென வள்ளெனச் சாற்றிய சடங்கிலே
நள்ளென வல்லாருண்டோ ஞானகாண் டத்தில். ()

ஆரணந் துதிசெய்யு மறிவினை யகமென்று
பூரண மாகியைம் புலன்களும் புறத்திட்டு
மரண முமற்றைப் பிறவியு மறுத்திடுங்
காரணங் கண்டாருண்டோ கன்மகாண்டத்தில். (கஉ)

ஞானகாண்டங் கன்மகாண்ட முற்றுப்பெற்றது.

---

## ககஉ - வது பாங்கிக்குரைத்தல்.

குறள்வெண்டாழிசை.

மானே பட்டது சற்றே மானே பட்டது சற்றே
மானிற் பெரியதோ ராண்பிள்ளை வந்து
தானே நானென்று போனானவன்
றன்னையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (க)
பெண்ணே பட்டது சற்றே பெண்ணே பட்டது சற்
பெண்ணிற் பெரியதோ ராண்பிள்ளை வந்து [றே
கண்ணே கண்ணென்று போனா னந்தக்
கண்ணையுங் கண்டிலே னென்னையுங் காணேன். (உ)

பாங்கிக்குரைத்தல் முற்றுப்பெற்றது.

---

## ககங - வது தச்சாண்டி.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உன்ற னிடத்திலு மூரா ரிடத்திலு
மூலகம் பதினாலு முள்ள வொருபொரு
டன்றனை யீதென்று காட்டித் தந்தார்க்குச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றோ. (க)



ஒப்பாரி தன்னு லுயிரோ பிரமமென்
றேதியே போகாமே யோர்மாத் திரைக்குள்ளே
தப்பாமே யிங்க னிருவென் றிருத்தச்
சமைத்துக் கழலிட்ட தச்சாண்டி யன்றோ. (உ)

தச்சாண்டி முற்றுப்பெற்றது.

---

## ககச - வது அப்பா.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

ஆத்ம சுருபமே மெய்த்தெய்வ மென்னு
மாரணம் பொய்யோ வனுபூதி யில்லையோ
பாரப்பற நீர்புனை முட்டைக் குருப்போற்
பாஷாணம் விட்டும்மைப் பார்த்தாலோ வப்பா. (க)
கொள்ளைக் * கிராந்தங் குதட்டிப் பிறகுநீர்
கோதிலா ஞானமுங் கூறியே நாணாதே
மெள்ள விருந்து சிவவேடங் கொண்டு
விழிசிம் மிளிக்கை தவிர்ந்தாலோ வப்பா. (உ)

அப்பா முற்றுப்பெற்றது.

---

## ககரு - வது குணலை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

தேவாரஞ் செய்கின்ற திண்டாட்ட மெல்லாந்
தீரவே தீர்ந்தோமென் றிடுகுணலை
செயலெங்கு மான திறம்பாடிப் பாடித்
தெளிவெங்கு மானதென் றிடுகுணலை

---

* கிராந்தம் - கிரியைமுடிவு.

நாவார வோதிய நாமமே தங்களு
 மெக்கினி யமையுமென் றிடுகுணலை
நம்மில்வே றிலையெனுந் தன்மை யதும்போக
 நாமோகா மானேமென் றிடுகுணலை. (க)

வேறு.

உடம்புட னுறவில்லை யுணர்வே யுறவென்று
 முணர்வொழிந் தில்லையென்றிடு குணலை
யோர்வி லுணர்வேயென் றிடுகுணலை
 கடம்படு மென்னுங் கதற்றுக் கழிந்தது
கலங்காது காணென் றிடுகுணலை
 கதற்று மொழிந்ததென் றிடுகுணலை. (உ)

ஆசார மெல்லா மடையவிட் டங்கா
 மானேநா மானேமென் றிடுகுணலை
யருமற்ற யறியாதென் றிடுகுணலை
 யாசார மன்னவை முழுது மறவிட்டே
யானந்த மானேமென் றிடுகுணலை
 யறிவு வடிவேயென் றிடுகுணலை. (௩)

குணலை முற்றுப்பெற்றது.

———

## ககசு - வது பிடாரன்.

குறள்வெண்செந்துறை.

ஈரதச்சிலுகாக்குஞ்சராவாட்டும்பிடாரரையெல்லாம்,போ
தச்சம்மட்டியாலேபோனபேர்னிடமெல்லாம்போகடிப்பேன்
வாக்கையடக்குவிப்பேன் மனமோடாஙமவைச்சுத்திரிப்
பே, னீக்கொன்றிலோடவுமொட்டேனின்மலமாக்கும்பிடா
ரனேனே. (உ)



அன்றுமென்றல்லல்கள்பேசியடங்கியிராதாரையெல்லா,
மொன்றாக மெய்யுணர் வாலேயொக்க விருத்தியொருக்கு
வேனே. (௩)

பிடாரன்முற்றுப்பெற்றது.

———

உ

சிவமயம்.

## ககஎ - வது அம்பட்டன்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பதைக்கவேதனைசெய்யும்பலமூலப்பெரும்புண்ணைப்
பார்வையா மயிலாலே யறுத்துத்தன் றசையா
முதித்தவு னினையுணர் வனலே கோலதுவா
யுண்மையிற் றெகித்திட்ட வம்பட்டன் சீயா. (க)

உலகொடுபொருண்மைந்தரொனுமுள்ளத்தொடுவை
யோர்வாலே கீறியங் கொழித்துண்மை யுணரா
வலைபேதப் பெருவன்மக் கிரந்தியை யறிவா
காரத்திற் கரைத்திட்ட வம்பட்டன் சீயா. (உ)

சங்கற்ப விகற்பமாந் தசையது படர்ந்து
தன்மையாம் விழிமூடிச் சடமாகி யுதித்த
வங்கத்தை யசமென்னும் படலத்தை யுரித்து
வறிவா விழிப்பித்த வம்பட்டன் * சீயா. (௩)

அம்பட்டன் முற்றுப்பெற்றது.

———

* சீயன் - பெரியோன்.

சிவமயம்.

## ககஅ - வது வண்ணான்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

கறையுறு முளத்துசிற் காமாதி முழுதுங்
  கமையென்னும் பெருங்கல்லிற் கரிசறப்புடைத்து
வறையுறு மலமா மதியுவர் பிடித்து
  வைம்பூதத் தொடக்கென்று மறவாவி வைத்து
வுறைதரு பெருமாயை யொதுக்கற வொலித்து
  வொழிவற வொளிர்போதப் பிரமமே யாக
மறைமுறை கழுவிய வண்ணத்த னடியேன்
  வாசாம கோசர வண்ணத்த னடியேன். (க)

தேசறு முளத்துசிற் றிகழ்மையன் முழுதுஞ்
  சிதையவே யெடுத்தடித் தலம்பியங் கதனை
யாசறு சமதம மதியுவர் பிடித்து
  வகிலத்தோ டணைவொன்று மறவாவி வைத்துப்
பேசுறு பெருமாயை பிறழ்வற வொலித்துப்
  பிறிதற வொளிர்போதப் பிரமமே யாக
மாசறக் கழுவிய வண்ணத்த னடியேன்
  வாசாம கோசர வண்ணத்த னடியேன். (உ)

அழுக்குறு முளத்துசி லாகுமுக் குணமீ
  டணைமுழு தறப்புடைத் தலம்பியங் கதனை
யிழுக்கறும் விமலமா மதியுவர் பிடித்து
  யானெனு தென்முழு தறவாவி வைத்து
புழுக்கூடி னுள்ளமாயை புரையற வொலித்துப்
  புரணபூ ரணப்போதப் பிரமமே யாக
வழுக்கறக் கழுவிய வண்ணத்த னடியேன்
  வாசாம கோசர வண்ணத்த னடியேன். (ங)

வண்ணான் முற்றுப்பெற்றது.



சிவமயம்.

## ககக - வது முதலியார்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சட்டென்று தலைப றித்திடுஞ் சழக்கறுத்த மு
தலியார், சாந்த மாகவே வாய்ந்த பாவனைத் தலைவி
லென்ற முதலியார், கட்டறுத் தெனைக் கழலிணைத
ந்து கண்ணளித்த முதலியார், காரிருளி லிரவிபோ
லுள்ளே கலந்துநின்ற முதலியார். (க)

சூறைகொள்ளும் புலன்களைந்தையுந் துணியவெ
ட்டு முதலியார், சுருதிசொன்ன சுகவடிவாகத் து
ணிவுதந்த முதலியார், பாறைநெஞ்சு பதஞ்செய்யு
ம்படி பார்த்தருளிய முதலியார், பத்தரெய்ப்பினில்
வைப்பதாகிய பரிசுடைய முதலியார். (உ)

அப்புலனுமவ் வுடலுமோர்வற மொழிதந்த முத
லியா, ரடியிணைதலை மிசையினில்வைத் தாண்டுகொ
ண்ட முதலியார், செப்பரிய சிவவடிவாகத் தெளிவு
தந்த முதலியார், சிந்தையோடு மனமொன்றும்படி
திருத்தியாண்ட முதலியார். (ங)

முதலியார் முற்றுப்பெற்றது.

---

கஉ0-வது

## தவமுந் தவமுடிந்ததும்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

சங்கரனுகி யிமையோர் தவம்பண்ணிச் சாரச்ச
டைகட்டவுந், தன்கழறன்னிற் பணியாருயிரொல்லாந்
தானே தலைகட்டவுந், தங்குல்பக லென்றடியார்கள்

வேறென்றுங் காணாமேகண்கட்டவுங், கட்டுவிட்ற்
றகண் காட்டினான்வீரக் கழல்கட்டிக் காட்டினானே.

பண்டைவினையாற் பணியாதவர்தம்மைப் பாசத்த
ளைகட்டவும், பணிக்தேத்திநிற்கு மடியாரைவிண்
ணோர் பணியப்பட்டங் கட்டவுங், கண்டுகளித்தவர்
பண்டுதாங்கத்திக் கதற்றுங்கலைகட்டவுங்,கண்ணாகிய
தன்னைக்காட்டினான்வீரக்கழல்கட்டிக்காட்டினானே.

வருபிறவிக்கு மருந்தென்றடியாரை மாலயன்கால்
கட்டவு, மனக்கணக்கிட்டு வழக்குற்றறைகின்ற வா
தியர்வாய்கட்டவுங், கருதலர்செம்பொற் கதிர்மேனி
யின்றன்மை காணாமேகண்கட்டவுங், காணாதுகாட்டி
ய தம்பிரான்வீரக் கழல்கட்டிக் காட்டினானே. (ரு)

தவமுந்தவமுடிந்தது முற்றுப்பெற்றது.

## கஉக - வது ஆண்டார்.

குறள்வெண்டாழிசை.

மூன்றாண்டவல்வினை பின்னாண்டுவாராமே மோ
க்கிசமாகவே சாக்கிரானுக்கிய, வென்னாண்டாரென்
பேனோ வென்னாண்டரென்பேனோ. (க)

மூண்டவல்வினை மாண்டுநான்வெறு முத்தனாக
வேசித்தனுக்கிய, வாண்டாரோயென்பேனோ வாண்
டிரோவென்யேனோ. (உ)

பூண்டமாமும்மல மாண்டுபின்னான்வெறும் பூர
ணமாகவே பொற்கழல்சூட்டிடு, வாண்டாரோயென்
பேனோ வாண்டீரோவென்பேனோ. (ங)

ஆண்டார் முற்றுப்பெற்றது.

உ

சிவமயம்.

## கஉஉ - வது தச்சன்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அறுகம்பு னுனிப்பனியின்ற ளவில்பல்யோனி
யினூடே, பெருந்தாயுதரக் குகைபாய்ச்சிப் பிறழ்ந்கி
யின் மீதுவளர்த்து, மறுகாலவ் வியோனியினூடே
வளர்காயம தாயிடும்வண்ண, மறியாம லியந்திரம்
வைத்த வர்சாரியை யாரறிவாரே. (க)

கால்வைத்திரு கையதுமூட்டிக் கழியென்பு நரம்
பொடிசைத்து, சாலக்குரு திப்புனலூடே தசையா
மதி டன்னையமைத்துத், தோலைக்கொடு மேலதன்மே
வித் துளைதுப வியந்திரகூடஞ், சாலப்பொறிவைச்
சதியக்குந் தச்சன்றனை யாரறிவாரே. (உ)

பொய்யுற்றுடல் போலொருபாவை பொறியுற்று
ள போலடித்துச், செய்யுற்றிகமோடுயரத்திற் செ
ன்றேயுழ லத்திரிவிரித்துக், கைவிட்டவியந்திரமாக
க் கண்வைத்தவை கண்ணில்விழுங்குந், தெய்வத்திக
ழ் தச்சனவன்றன் செம்பொற்கழல் சூடவல்லீரோ.

தச்சன் முற்றுப்பெற்றது.

## கஉங - வது பாம்பாட்டி.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

விரகற்ற குட்டத்திலே பாம்ப டைப்போம்
வேதாந்த வெளியிலே விட்டாட் டுவோம்
காரணங்கள் பிடித்தங்கே யிரையி டுவோம்
காலங் கழியவே தப்பி டுவோம்

பரவிய மும்மல மாயை யென்னும்
  பாம்புதான் சீறிக் கடித்த போது
வுரையற்ற மந்திரங் கொண்டு மீட்போ
  முள்ளுளார் வாழநின் றாடாய் பாம்பே. (க)

சித்திர முத்தி தருமென் றெண்ணிச்
  சிந்தித்து நாளுந் திகைத்தி ராதே
பத்திர நிற்கவுறை குத்து மோதான்
  பார்த்தானைப் பார்த்துநின் றாடாய் பாம்பே. (உ)

ஓங்கார தட்புகுந் துச்சி யேறி
  யொன்பது துவாரத்தி னுட்பு குந்து
தூங்காமை தூங்கிநின் றாடாய் பாம்பே
  தொந்தங் கடந்தோமென் றாடாய் பாம்பே. (ங)

ஆறுரு மிங்கேயம் பலமு மிங்கே
  யாடரவக் கிண்கிணிக் காலு மிங்கே
பேருரு மிட்பவா கன்மு மிங்கே
  பிறப்பிறப் பற்றிடந் தானுமிங்கே
சீராருஞ் சிவஞான போதந் தன்னைத்
  தெளிந்து தெளிந்துநின் றாடாய் பாம்பே. (ச)

பாம்பாட்டி முற்றுப்பெற்றது.

---

## ௧௨ச - வது நிலம்.

குறள்வெண்செந்துறை.

வேறுகூறென் றுமிலாதநிலம்வேதாந்தமெய்ப்பொருளானநில
மாறியதிந்தாரறியுமவ்வனேயாகியிருந்தநிலம். (க)

எல்லாவழக்குங்கடந்த நிலமேகமேயாகியிருந்தநிலம்
பொல்லாங்குதன்னிற்புகுதாநிலம்பூரணயோர்தமாய்நின்றநிலம்



கல்விக்கட்டைக்கடந்தநிலங் கற்பனையெல்லாந்தவிர்ந்தநிலஞ்
சொல்லற்றசோதியாய்நின்றநிலஞ்சோகமோகாதிதுறந்தநிலம்

அறிவேவடிவாயிருந்தநில மாற்றலுடையாரமர்ந்தநிலம்
பிறிவேதுமின்றியிருந்தநிலம் பிரமம்பெருவெளியானநிலம்.

சித்தஞ்சிவமாயிருந்தநிலஞ்செய்வனவொன்றுடன்கூடாநில
முத்தனுமுத்தியுமானநில முக்குணமெல்லாமுடிந்தநிலம். (ரு)

நிலமுற்றுப்பெற்றது.

---

## ௧உ௫ - வது தட்டான்.

இரட்டைக்குறள்வெண்செந்துறை.

பந்தமாம் பணிசெய்யுந் தட்டா னென்றும்
பலதார் பதக்கஞ் செய்யுந் தட்டான்
மூந்து நாண்வளை பண்ணுந் தட்டான்
முற்பவமெல்லா முடிவுசெய்யுந் தட்டான். (க)

இருவினைத் தளைசெய்யுந் தட்டா னேனைத்
தளப்பமு நன்றாய்ப் பண்ணுந் தட்டான்
சரியுடற் சரிசெய்யுந் தட்டான் இருந்தச்
சங்கிலி பண்ணும்வீ ரத்தட் டானே. (உ)

ஐயஞ் சாவடங் கோக்குந் தட்டா
னசையணி கட்டுவடம் பண்ணுந் தட்டான் ஞான
மெய்யுள்ளக் குழைசெய்யுந் தட்டானே.
மெய்க்குழை செய்யும்வீ ரத்தட்டானே. (ங)

அறுதொழி லாழிசெய் தட்டானென்று
மருமறைச் சிலம்புசெய்யுந் தட்டா
னுறுமுயி ருடல்கோத் தங்கு லகே
யூடன்செய்யும் வீரத் தட்டானே. (ச)

மையுற்ற பவபா சக்கு ழைசெய்
வயிர வீட்டுபண்ணுந் தட்டான்
செய்யுற்ற தொழிருனுய் முழுதுஞ்
சிவப்பிர காசமொன்றுந் தட்டானே. (௫)

தட்டான் முற்றுப்பெற்றது.

---

௧௨௬ - வது

## ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

சாத்துந் தனிமாலை தானுனே னுகிலலோ
தம்பிரா னுக்குநெற்றித் தாரானே னுகிலலோ
வேத்து மடியார் திரளானே னுகிலலோ
வெம்பிராற் கேதேனு மொன்றுனே னுகிலலோ. (௧)

பூங்கோயில் செய்கைக்குப் பூவானே னுகில்லோ
பூவோடே யேறிய நாரானே னுகிலலோ
பாங்கா மடியார்க்குப் பாங்கானே னுகிலலோ
பரமன் றிருப்பணிக் காளானே னுகிலலோ. (௨)

இட்ட திரிமுண்டந் தானுனே னுகிலலோ
விலங்குந் திருச்செவிப் பூணுனே னுகிலலோ
கட்டிய வீரக் கழலானே னுகிலலோ
கழலுக் கிசைந்தசெய் காலானே னுகிலலோ. (௩)

உருகு மடியா ருளமானே னுகிலலோ
வுவந்துவந் தேத்து முரையானே னுகிலலோ
பெருகிச் சொரியுங்கண் ணீரானே னுகிலலோ
பெருமா னுக்குநாளும் பித்தானே னுகிலலோ. (௪)



கலையறப் பார்த்தருட் கண்ணுனே னுகிலலோ
கண்ணிற் கருணைக் கடலானே னுகிலலோ
தலையிறந்த செய்ய தாளானே னுகிலலோ
தாடந்த தம்பிரான் றுனுனே னுகிலலோ. (௫)

ஏவலிலாக்காரணத்திகழ்ச்சி முற்றுப்பெற்றது.

---

## ௧௨௭ - வது அம்மானை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மாயைக்கு வடிவு கொடுப்பார்கா ணம்மானை
மாயையா லுலகு வளர்ப்பார்கா ணம்மானை
யாயி லறிவா யிருப்பார்கா ணம்மானை
யாயாத போதுலக மாவர்கா ணம்மானை. (௧)

பார்க்கி லுலகம் பழுதைகா ணம்மானை
பாராதபோது பழுதைபாம் பம்மானை
யார்க்கு மறிய வரிதுகா ணம்மானை
யற்ற திறையடிகண் மற்றிலா வம்மானை. (௨)

ஊனெனுந் தூணி லுதிப்பார்கா ணம்மானை
யோரா ருடலைப் பிளப்பார்கா ணம்மானை
யானென தென்னவொண்ணு வின்பங்கா ணம்மானை
யின்ப துன்பமற் றிருப்பார்கா ணம்மானை. (௩)

பத்திக் கடலி லமிழ்தங்கா ணம்மானை
பார்க்கில் பரஞ்சோதி யாவர்கா ணம்மானை
யெத்திக்கு மெப்போது மிற்பார்கா ணம்மானை
யீறிலாப் போதமாவர்கா ணம்மானை. (௪)

உண்டிபா னங்க ளுயிரள வம்மானை
யோரின் மனத்தே சுகதுக்க மம்மானை

கண்ட னைமரணங் காயத்தே யம்மானை
காண்பானுக் காறான மில்லைகா ணம்மானை. (ரு)

ஆறுபா வங்களு மில்லைகா ணம்மானை
யாறுகோ * தானு மப்படியே யம்மானை
பேறு மிழவுமில்லாப் பேரின்ப மம்மானை
பேதா பேதமில்லாப் பிரமங்கா ணம்மானை. (சு)

அம்மானை முற்றுப்பெற்றது.

## கஉஅ - வது காளம்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அன்னிய மில்லையென் றூதேடா காள
மானந்த மானேமென் றூதேடா காளந்
தன்னு சுடரோயென் றூதேடா காளஞ்
சோதியுட் சோதியென் றூதேடா காளம். (க)

பிறவி கழிந்ததென் றூதேடா காளம்
பேதைமை தீர்ந்ததென் றூதேடா காளம்
அறிவே வடிவென் றூதேடா காள
மறியாமை போனதென் றூதேடா காளம். (உ)

கோசங் குலைந்ததென் றூதேடா காளங்
கூரறி வானதென் றூதேடா காளம்
பாசம் பறிந்ததென் றூதேடா காளம்
பரமே பரமமென் றூதேடா காளம். (ங)

பற்றற்று நின்றேமென் றூதேடா காளம்
பார்ப்பறப் பார்த்தோமென் றூதேடா காள

* கோதுகாமாதி = கோடியென்றும்பாடம்.



முற்ற வுணர்வேயென் றூதேடா காள
முள்ளொளி யானேமென் றூதேடா காளம். (ச)

உள்ளது போதமென் றூதேடா காள
முலகமோக் காளமென் றூதேடர் காளம்
வெள்ள வெளியிதென் றூதேடா காளம்
வேதஞ் சொன்னவண்ண மூதேடா காளம். (ரு)

ஊனே மறிவதென் றூதேடா காள
முணர்வே பிரமமென் றூதேடா காள
நானே யவனுமென் றூதேடா காள
நானுவ தில்லையென் றூதேடா காளம். (சு)

உண்மை வடிவேயென் றூதேடா காள
முட்புறம் பில்லையென் றூதேடா காளந்
திண்மை யறிவேயென் றூதேடா காளந்
திசைதிசை தோறுமென் றூதேடா காளம். (எ)

சாதி கழிந்ததென் றூதேடா காளஞ்
சங்கை தவிர்ந்ததென் றூதேடா காளஞ்
சோதி சுகமேயென் றூதேடா காளஞ்
சொல்லவொண் ணாததென் றூதேடா காளம். (அ)

காளமுற்றுப்பெற்றது.

## கஉகூ - வது ஆவாள்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

உள்ளா னொருவன்கா ணுவாளே, யுனையல தொ
ன்றுமிலை யாவாளே, விள்ளா னொருக்காலு மாவா
ளே, வேண்டுந்தே வைகொள்வா ணுவாளே. (க)

பண்டே யென்க்கடை யாவாளே, பற்றித்தென்று லேகா ணுவாளே, கண்டெ மதிகெட்டே னுவாளே கண்டுகூடக் கைவிட்டே னுவாளே. (உ)

தேடுமவ னனேகா ணுவாளே, தேடப்படு மவரல்ல ராவாளே, விடுமவர் தாமேகா ணுவாளே, வேண்டுந்தே வைமீட்ப ராவாளே. (ங)

காரியஞ் செய்வார்கா ணுவாளே, கண்ணாலே கழிப்பர்கா ணுவாளே, நேரியர் கூரிய ராவாளே, நிற்பரெங் கும்போகா ராவாளே. (ச)

வாயுங் கையுமில்லை யாவாளே, வாவென் றழைக்க வல்ல ராவாளே, யெய்வு மோய்வுந்தாரா ராவாளே, யெப்போதும் வாய்தாரி யாவாளே. (ரு)

பேதித் திட்டத்திலு மாவாளே, போரா திருப்பர்கா ணுவாளே, யோதிக் குடிகெட்டோ மாவாளே, யுனை யுமெனை யுங்கைவிட்டா ராவாளே. (சா)

வஞ்சனை செய்வார்கா ணுவாளே, வாக்கு மனமழிப்பா ராவாளே, நெஞ்சு கலங்கினு மாவாளே, நேதியென்று நிற்ப ராவாளே. (எ)

ஓராத போதுளா ராவாளே, யோரி லொளிப்பர்கா ணுவாளே, * யோராத நீயவ ராவாளே, யெல்லா மறிவுகா ணுவாளே. (அ)

ஆவாள் முற்றுப்பெற்றது.

---

* ஏராகதவென்பது - ஏரதவென விகாரமாயிற்று.



சிவமயம்.

## கநூo - வது சோதனை.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

பூணப் படாதன பூண்டு
போர்த்துடுத் துப்புறம் பேதிரிவேனைக்
காணப் படாயென்று சொல்லியெனிற்
கண்ட தனைத்துங் கழித்துவிட் டானே. (க)

எட்டாங் காணத்தி னுள்ளே
யேவின காரியஞ் செய்திருப் பேனை
வெட்ட வெளியினிற் காட்டி
வேற்று முகந்தோன்று வேறுசெய் தானே. (உ)

உலகர்க் கிசைய நடந்திட்
டொன்றுமுள் ளென்றென் றுணர்ந்திருப்பேனைச்
சிலுகற்ற சிற்பர மாக்கியெனிற்
சேரு மனத்தையுஞ் செம்மை செய்தானே. (ங)

காரிய முண்டென்று சொல்லிக்
கண்ணுக்கெட் டாதே நடக்கப் போவேனை
யாரியன் வந்துபுக் கென்னை
யப்போதே யானந்த மாக்கி விட்டானே. (ச)

சொல்ல வொண்ணாதன சொல்லிச்
செவியோடு கண்வாய்கள் சோதித்துப் பார்த்தென்
னெல்லை யிலாவழி யாகி
யானு மிதன்றி யினிதிருந் தேனே. (ரு)

சிட்டனு மாய்ப்பட் டனுமாய்த்
தேசத்துள் ளாரொரு வன்சொல்லப் போகப்
பட்ட விதனமும் பாரீர்
பரிபூர்ண மேபின்னு மானது பாரீர். (சா)

நீருக் குமிழியது போல
நிலையில்லா வாக்கைக்கு நேசித் திருந்தே
யாருக்கு நன்மைசெய் தோமா
மறிவே யகண்டமு மாய் வறியாதே. (௭)

ஏழைத் தனந்தனி னாலே
யென்னில்வே றில்லையென் றேநெடு நாளாய்ப்
பாழுக் கிறைத்தோமு நாமே
யண்டை யறிவை யறியா திருந்தே. (௮)

சோதனை முற்றுப்பெற்றது.

## ௧௩௧ - வது ஊர்.

இரட்டைக்குறள் வெண்செந்துறை.

* நான்முக னுக்கிட மானதூ ரெங்களூர்
நான்மறை யுந்துதி செய்யுமூ ரெங்களூர்
தேவுக்குந் தேவா யிருக்குமூ ரெங்களூர்
தேவர்க ளன்றித் திரியுமூ ரெங்களூர். (௧)

தோற்றர வாகத் துணிந்ததூ ரெங்களூர்
சோகமோ கங்க ளிறந்ததூ ரெங்களூ
ராற்ற லுடையார்க் கடைத்ததூ ரெங்களூ
ரானந்த மாயே யிருக்குமூ ரெங்களூர். (௨)

காமக் குரோதங் கழிந்ததூ ரெங்களூர்
கல்விக் கடலைக் கடந்ததூ ரெங்களூர்
நாமரூ பங்க டவிர்ந்ததூ ரெங்களூர்
ஞானமே யாக நவின்றதூ ரெங்களூர். (௩)

* இச்செய்யுள் நெடின் மோனை = எதுகையின்று.



அறிவிட் டறியாமை போக்குமூ ரெங்களூ
ரன்னிய மொன்றுமி லாததூ ரெங்களூர்
குறியிட்டி தென்னவொண் ணாததூ ரெங்களூர்
கோசங்க ளைந்துங் குலைந்ததூ ரெங்களூர். (௪)

புத்தி விகற்ப மறுக்குமூ ரெங்களூர்
பூரண போதமே யானதூ ரெங்களூர்
வித்தும் விளைவு மிலாததூ ரெங்களூர்
விண்முதற் பூதம் விளைந்ததூ ரெங்களூர். (௫)

எட்டுத் திசையு நிறைந்ததூ ரெங்களூ
ரேகாந்த மாகி யிருக்குமூ ரெங்களூர்
தட்டற்ற யோகிக டங்குமூ ரெங்களூர்
தன்மபா வங்க டவிர்ந்ததூ ரெங்களூர். (௬)

உலகத்தை யெல்லா மொருக்குமூ ரெங்களூ
ருண்மையொன் றாகியொன் றானதூ ரெங்களூர்
சிலுகற்ற சிற்பர மானதூ ரெங்களூர்
சிந்தனை விட்டுத் தெளிந்ததூ ரெங்களூர். (௭)

உன்னப் படாவுணர் வானதூ ரெங்களூ
ருள்ளொளி யாகி யிருக்குமூ ரெங்களூர்
கண்ணுக் கணித்தா யிருக்குமூ ரெங்களூர்
கள்ளப் புலனைக் கழித்ததூ ரெங்களூர். (௮)

சுத்தஞ் சிலுகு மிலாததூ ரெங்களூர்
காண்பானுங் காட்சியு மற்றதூ ரெங்களூர்
சுத்த வெளியிலே தோன்றுமூ ரெங்களூர்
சோம்பர் சுகமென் றுணர்ந்ததூ ரெங்களூர். (௯)

ஊர் முற்றுப்பெற்றது.

## கஙஉ - வது வாரணம்.

### இரட்டைக் குறள்வெண்செந்துறை.

வினைவி லங்கு கழற்றிய வாரணம்
விரத கம்ப முறித்திடும் வாரண
மெனதி யானென் கணையை முறித்தெறிந்
தெங்கு மாமயிழ் தாகிய வாரணம். (க)

கரணப் பாகரை வீசிய வாரணங்
கருணை மாமலை மேவிய வாரண
மரண மாமறை யீறு முழக்கவே
யறநல் வீதியி லேவரும் வாரணம். (உ)

பத்தி வண்கோ லுக் குளைந்தநல் வாரணம்
பாசக் கயிற்றாற் கட்டுணு வாரண
முத்தி மர்டிடு விற்படி வாரண
மூல மர்மத வாரணம் வாரணம். (ங)

அன்ப ரன்பளற் றிற்படும் வாரண
மான்ற மாமத மேபொழி வாரணம்
வன்பி லோடு மனிதரை வாரியே
மாசு சேர்கிர யத்தெறி வாரணம். (ச)

சமய வைம்பொழில் சாடியே யைங்தெனுந்
தழைமு றித்தயி லுந்தனி வாரண
மமைய வாறினர் மேல்கொளும் வாரண
மாதி மூலமென் றேதிடும் வாரணம். (ரு)

சுத்த வாதங் கழிந்தநல் வாரணங்
கவள மாவண்டி மூண்டதோர் வாரண
சித்த வாரரு ளின்பட்டங் கட்டியே
சீச னெனையு மாண்மத வாரணம். (சு)



அலம லக்குறு மென்மனந் தன்னையே
யசைவ றச்சிவ மாக்கிய வாரணங்
கலக லப்பைதுாற் கட்டுணா பொன்றினற்
கரிச றுத்தநல் வாரணம் வாரணம். (எ)

கொச்சை வன்குலச் சாதிச் சடங்கெனுங்
கோடு வான்கொம் பற்றநல் வாரண
மச்ச மேதறு மறுத்தெனை யாண்டுகொண்
டிட்ட மாமத வாரணம் வாரணம். (அ)

மூவ ரும்பணிந் தேத்திடும் வாரண
முடிவில் கற்பகச் சோலையில் வாரண
மாவ வென்றடி யாருட னென்னையு
மாண்ட மாமத வாரணம் வாரணம். (கூ)

வாரண முற்றுப்பெற்றது.

---

## கஙங - வது மெய்ஞ்ஞானவிளக்கம்.

### இரட்டைக்குறள்வெண்செந்துறை.

ஆடு பார்க்குதேடா வாரக் கோனே
யடையப் படர்ந்துதேடா வாரக் கோனே
யேசடி மறியேடா வாரக் கோனே
யுள்ளே மறியேடா வாரக் கோனே. (க)

குறுகவளை குறுகவளை கோலக் கோனே
குரவனடி குறுகவளை கோலக் கோனே
குறுகவளைத் தவிழவிராய் கோலக் கோனே
குரம்பைதனைக் குலையவிராய் கோலக் கோனே. (உ)

ஓடியிடு காடேநான் * போகு தேனே
யோடாமை யுள்ளே மறிக்கு தேனே
யோடாமை யுள்ளே மறித்த வாறே
யோவாமை நின்று நடுங்கு தேனே. (ங)

ஓவாதே நின்று நடுங்கு மென்னை
யுள்ளே புகத்திரியத் தள்ளு தேனே
காவா நரகமுங் கைக மூன்று
கருதுமங் கொன்றையுங் காண்கி லேனே. (ச)

காணாதே நின்று கழியுமென்னைக்
காவிட்டுக் காவிட்டுப் பாயு தேனே
காணாத கண்ணைத் துடைக்கு தேனே
கதிர்போ லறிவங்கே காண்கு தேனே. (ரு)

அறிவா லனைத்தையுங் காண்கு தேனே
யறிந்த வறிவா யிருக்கு தேனே
பிறியா வறிவா யெனையு மந்தப்
பேச்சற் றிடத்தி லொளிக்கு தேனே. (சா)

போமை பேச்சற் றிடத்தே வைத்துப்
பேரின்பப் பாற்சோ றிடுகு தேனே
யாராதே நான்வாரி யுண்கு தேனே
யடையவு நானா யிருக்கு தேனே. (எ)

உண்டு களித்துநின் றாடு தேனே
யோரவா தொளிரநின் றாடு தேனே
யண்ட மழிந்துநின் றாடு தேனே
யலைவறக் கொட்டிநின் றாடு தேனே. (அ)

* இப்பதிகத்தில் மூன்றாவதுமுதல் ஒன்பதாஞ்செய்யுள் வரைக்கும் அடிகளினீற்றுச்சொற்கள் காலவிடைநிலைகுறைந்து மருவிநின்றன.



உண்மைக் குழலைநின் றூது தேனே
யுரைமாண்டு சும்மா விருக்கு தேனே
வண்மைக் கருணை வளத்தை யுன்னி
மறுகி யுடைந்துக்குப் போது தேனே. (கூ)

ஆதர மிக்குநின் றூடாய் கோனே
யதிசய மிக்குநின் றூடாய் கோனே
சாதியை விட்டெறிந் தாடாய் கோனே
சதுரினை விட்டெறிந் தாடாய் கோனே. (கo)

மெய்ஞ்ஞானவிளக்க முற்றுப்பெற்றது.

---

## கஙச - வது குறி.

ஆசிரியவிருத்தம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

ஆதிப்பிரமத் திருக்குமறியாமை யாகர்சாதிபூதமா
யப், பூதத்திரளாம் புலன்களொருபதாய்ப் போகும்
பொறிகளாலே, யோதத்தகும் வாக்காதிகரணமான்
கோங்கிய சோலைக்குள்ளே, வேதத்தலைவன் வருங்
குறியாமிந்த வேதாந்தத்திடக்குறியே. (க)

ஏகனனேகனிடை யொருவரின்றியெங்கு நிறைந்
துநின்று, போகம்புலன்கள் பொழுதுயுணரிலும்போ
தமே யாகிநின்றேன், மோகங்கழியமுன் வேடங்கொ
ண்டென்பான் முத்தியளித்தபோதே, யேகும்பிறவி
யென் றிடக்கண்டுடித்திடுமின்றே வருங்குறியே. (உ)

அங்குமொருகுறை யின்றியழியாவறிவா யிருக்கை
யாலும், மிங்குமொருகுறை யின்றிபிணியனேகமாய்
கிற்கையாலும், பொங்கும்பிறவியும்பூதப்புலன்களும்

பொய்யா யிருக்கையாலு, மெங்குநிறைந்தவ னென்
னையருள்செய்வனென்றே யிடுங்குறியே. (ங)

பூணும்புலன்க ளனைத்தையும் பொய்யாய்ப் பொ
ருந்திக்கழறரவும், பேணுமனத்தைப் பிரமமாயிடப்
பேசாதுபேசிடவுங், காணுங்கனவுநான் கண்டநிமி
த்தமுங் கண்டோடிப்பனவும், வீணன்றுகாணும்
விமலன்வருகைக்கு மெய்யேயிடுங்குறியே. (ச)

நீசெய்வினையா னிலையாதவூனையெடுத்து நெடுநா
ளெல்லாம், வீசேழுலகில் விழுவதெழுவதாய் வீ
ணேயுழன்றுயென், றோசைபரிச முருவஞ்சுவைகந்
த மோரிலுணர்வாகுமென், றுசையறுக்க வமலன்வ
ருங்குறி யங்கத்திடுங்குறியே. (ரு)

சலியாதுலக மனைத்தையுநோக்கிச் சனனமரண
ங்களு, மெலியாவிகபர லோகங்கடன்னில்வெறுப்பு
ம் விழைவியாவையும், பலியாதேபச்சென் றிருந்த
வனைத்தையும் பார்த்துப்பரமொழிய, நிலையாமலெ
ன் னெஞ்சுதன்னில்வருங்குறி நித்தன்வருங்குறியே.

ஆருமறியாவறிவதே நானென்றிட்டானந்த மாக
ச்செய்தே, தூரனணியனைக் கன்மயக்கனுத் தோ
ற்றுமம்மாயையினு,லோரறிவாகவுணர்த்த வுணர்வா
குந்தம்மை யுணர்ந்தபோதே, பேரறிவாய்ப்பி னன்
றியப்பட்டாமை பிரமமாங்குறியே. (எ)

தன்னையறியா திருந்தான்றனையிறைதா னறிவித்த
போதே, யுன்னியமின்றி யகண்டபோதம்மா யறிந்
துமறியாவிழற், பன்னும்மற்றையும் பரமேநீயென்று ப
ணித்தபடியதுவா, யின்னதிதுவென் றியம்பவொண்
ணப்பர மென்னுங்குறியதுவே. (அ)



தந்தைதாய்சுற்றந் தனையந்தமாகவே தரணியினு
ள்ளதெல்லாம், பந்தமேயன்றிப் பயனில்லையென்று
பின் பாசம்பறித்தபோதே, சிந்தையவற்றினிற் சே
ராதவண்ணஞ் செறுத்தேயறத்தையுன்னி,வந்தபடி
கண்டு மானமற்றில்லது மாயையறுங்குறியே. (கூ)

அத்தனைகாலமறிந்தவர்தம்மி லடங்கியிருப்பதுவு
மித்தனைகாலமிவ்வூனையெடுத்தவிருவினைப்பற்றதுவு
மத்தனருமறை யாலதுநீயென்ன யானவனுனதுவு
நித்தனுய்முத்தனுய் வேரொருவரின்றி நிற்கவருங்குறியே.

குறி முற்றுப்பெற்றது.

---

## கநடு - வது கனவுநா.

### கலிவிருத்தம்.

உண்மையே யாகி யுலகுதிப் பதன்முன்ன
முண்மையிற் றொன்று முணரமை யாலுதித்
துண்மையா லேவளர்ந் துண்மையி னுள்புக்குக்
கண்மையாய்த்தோன்றக் கனக்கண்டேன்றோழிநான்.

வானே முதலாய வையம் படைத்தபி
னானே புகுந்துமின் றுள்ளடங் கிக்கொண்டு
நானே முதலாம் பிரம முதலாகத்
தானே தழைக்கக் கனக்கண்டேன் றோழிநான். (உ)

பண்டமுன் டென்று பாங்கெட் டிராதேநீ
விண்டிடும் போதேவே தாந்தத்தை நோக்கிட
வண்டமே யாத லகண்டமே யாதல்
கண்ட தழிக்கக் கனக்கண்டேன் றோழிநான். (ங)

மெய்தவத் தாலுன்னை முற்ற வுணர்ந்திட்டுச்
செய்தவத் தாலுன்னைச் சிந்தித் திராதேநீ
கொய்தநற் கூற்றையுங் கொண்டநற் கோதையுங்
கைதவ மாகக் கனாக்கண்டேன் றோழிநான். (ச)

எங்கள் பெருமா னிணையடி சென்னிமேற்
றங்கும் படிதந்து தாமரைக் கண்களாற்
பொங்கும் பிறவிகள் போயகலப் பார்த்துக்
கங்குல் கழியக் கனாக்கண்டேன் றோழிநான். (ரு)

அன்னை மறையாக வப்ப னறிவாக
வுன்னிய போதே யுலகையு மூனையுந்
தன்னி லொளித்திடத் தன்குண மாங்கேயாய்க்
கன்னி பிறக்கக் கனாக்கண்டேன் றோழிநான். (சு)

வேரிலா மாயைதான் வித்தாகிப் பூதமாய்ப்
பாரிலே தட்டுப் பரந்து பலகொம்பா
யீரிலை யாயிர் திரியங்க ளேபூத்திங்
கோரி லொளிக்கக் கனாக்கண்டேன் றோழிநான். (எ)

சத்துக்குற் பத்திமுன் சத்தாதலா லில்லைச்
சத்தா வதுக்கு மசத்தலால் வேறில்லைச்
சத்து மசத்துமாய்ச் சந்திப்ப தொன்றில்லைப்
பித்தம் பிதற்றக் கனாக்கண்டேன் றோழிநான். (அ)

பற்றிலா தாரொருவன் பார்த்திட்ட பார்வையான்
மற்றில்லா மாயை மரமுறிந்து போறிவாய்க்
கற்றிலைக் காக்கைத் தெல்லாங் கனியுண்ணக்
கற்றிலே பார்க்கக் கனாக்கண்டேன் றோழிநான். (கூ)



பேரா வுறக்கத்தாற் பெண்டிர் மகச்சுற்ற
மூராரெனத்தா னுறக்கத்தி னின்றேனைச்
சீரார் மறைவிளை ஸ்ரீபுரு ஷோத்தம
னோரா வுணர்த்தநா னுள்ளொளியா னேனே. (கo)

கனாவுரை முற்றுப்பெற்றது.

## கஙசு - வது குறத்தி.

கலிவிருத்தம்.

பேதை வனம்புக்குப் பிணிமூப்புப் பின்சூழச்
சாதி பலபேசிச் சரித்திடுங் குறத்தியல்லேன்
கேதம் பலவின்றிக் கீழ்மேலொன் றில்லாத
போத வடிவாம் புரையறுங் குறத்தியேனே. (க)

நில்லா வுபாதிகளை நிருபியா நிலையாலே
பொல்லாத விடயத்திற்புகுந்துவிழுங்குறத்தியல்லே
னெல்லாம் பிரமமென வெண்ணில்வே றிலைகண்டு
சொல்லாலுணர்வொண்ணாச்சுகமாங்குறத்தியேனே.

மின்னிக் கழிந்தாற்போல் வீழுங் கனவுடலை
யுன்னிப் பலனுறவுசெய்யுங் குறத்தியல்லேன்
றன்னைத் தனிற்கண்டு சத்தாதி யிந்தியங்க
ளென்றுங் கினியென விழித்திடுங் குறத்தியேனே.

பச்சை வடம்பூண்டு பசுங்குழவி யரைசேர்த்துப்
பிச்சை பலகொண்டு பிழைபேசுங் குறத்தியல்லே
னச்ச மறத்துறந்த வதிகாரி குடிறோறும்
விச்சைபல்சொல்லி விளையாடுங்குறத்தியேனே. (ச)

கட்டருங் கரணமென்னுங் கடுநாய்கள் புடைசூழப்
புட்டி றலைவைத்துப் போய்மீளுங் குறத்தியல்லேன்
சிட்ட னடிசூழச் சிவனே பிரமமென்று
விட்டுவிடா தொன்றில் விளையாடுங் குறத்தியேனே.

விதிகள் பலபிதற்றி மேதினி புற்பரப்பி
நிதிகள் பலதேடி செய்துவுங் குறத்தியல்லேன்
மதிகள் பலவிட்டு மரணபவ மானம்விட்டு
விதுவது வென்றே யேகமாங் குறத்தியேனே. (சு)

ஊனவடி வென்றெண்ணு மூலகிற் பிறந்திருந்து
கானல் புனலென்று கருதிடுங் குறத்தியல்லே
ஞனமதப் பட்டதுபோ லாரணக் காட்டினுள்ள
தேனறிவை யுண்டு தெளிவாகுங் குறத்தியேனே.எ

குத்துத் தினைகுத்திக் கொழுமரத் தேன்வாங்கி
யத்திற்குழைத் துண்டறஞ்சொல்லுங்குறத்தியல்லேன்
முத்திமலை யேறிமுடி யாதவ னகத்தேனைத்
தித்திக்க வுண்டு தெளிவாகுங் குறத்தியேனே. (அ)

கேடுபடு முட்றனக்குக் கீழாய கிழங்குகல்லிக்
காடு மலையுங் கருதியிடும் குறத்தியல்லேன்
பாடு மறையிற் பரம்பிரம மூனாலுங்
கூடும் வகைதேடிக்குனித்திடுங் குறத்தியேனே.(கூ)

போற்றித் தலைக்கொண்டு பூமச் சோதிபாத
மூற்ற மதுவாக வுட்சோதி யுரைபத்து
மாற்றும் பவமென்ன மனத்தோடே யதிகரித்துக்
கூற்றுங் கன்விலுங் குறுகிடாக் குறத்தியேனே.(க0)

குறத்தி முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

## கஙஎ - வது ஊசல்.

### கலிவிருத்தம்.

ஆரணமாங்கால்களுட்டி யறிவாங்கயிறதுதூக்கிப்
பூரணமாம்பலகைசேர்த்துப்புத்தியதிற்பொருந்தவைத்து
வாரணியுமுலையார்தங்கள் வலையிற்போகாவண்ணங்காத்துச் (க)
சேரணியுஞ்சித்தம்வேறுதிரியாவண்ணமாடிரூசல். [யை
தானாகாவடிவுதன்னைதானாகம்வடிவை
யூனுரோடொன்றப்பண்ணியொன்றிலொன்றைமறைக்குமா
தானேதானறியவேண்டிச் சத்தினோடசத்துமின்றி (உ)
வானுதிபூதங்களுமாமாயைபோச்சென்றாடிரூசல். [தான்
வேதமுதனீர்தரித்துவிதித்தகன்மம்பலவுஞ்செய்து
சாதிபேதம் பலவுண்டாகச்சமைந்தான்ஞானம்பிறக்குமோ
வேதவதிகாரந்தன்னூல்விதித்தகன்மந்தனக்குமுன்னே
சாதனாலுமுண்டேயாகிற்சமைந்ததேயென்றாடிரூசல். ஙு
களைபுரளப்பெருகுமாற்றிற்கங்குறங்கில்லாதாற்போ
லைமுதலாம்யோகத்தாலேயொருமைதன்னைக்குலைக்கவல்
விருமையென்னுமாற்றையேறிவேகமண்டபத்திருந்து [ல
பிரமமென்னும்பார்வையாலேபிறவாவண்ணமாடிரூசல்.(ச)
புத்தேந்திரியங்கண்முதற்பொறிகடன்மேற்புணரும்போது
சித்திரையில்வந்தபோதுநின்றபோதுமில்லாப்போது
மித்தனையுங்காண்கையாலேயெங்குமுள்ளானேகமாயே (ரு)
யத்தனையுமறிகையர்லேயறிவாளென்றாடிரூசல். [ண்டாம்
பதினெட்டுவடிவமதாகிப்பரலோகமேறலாமென்று
கெதிகெட்டமனிதர்சொல்வேள்விக்கேடுபாட்டைக்கேட்கவே
விதிதட்டாவேதாந்தத்தின்விளங்குஞானமெய்ச்சுடரை
மதிதட்டாதேயறிந்தபோதே மாயைபோச்சென்றாடிரூசல்.

மேதினியேபாதமாகவிரியும்வானேயுதரமாகப்
போதம்திருமுகமதாகப்புரந்தரனூர்முடியேயாக
வேதமாதிவாயதாகவிரியும்வாயுவுயிரதாக
வாதியிலேயவதரித்தவவனேகானென்றாடிரூசல். (௭)

புரியினிடையரவுதோன்றிப்போனபோதும்போகாப்போதம்
புரியதுவேயானுற்போலப்போதமாகும் புரணந்தானென்னி
லெரியொடுநீர்வன மண்விண்ணெல்லாந் தோன்றியழியும்
போதி, வரியமாயையத்தில்வீழ்க்காமமாயவாடிரூசல்.(௮)

ஊசல் முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்.

## ௧௩௮ - வது கழல்.

கலித்தாழிசை.

ஒன்றேகாண் பெண்ணே யுலகம் பதினாலு
முள்ளது போதமென் றாடாய்கழ
லொழிவற நின்றேமென் றாடாய் கழல். (௧)

இரண்டுகாண் பெண்ணே யிடையிங் கிலக
ளிரண்டுமொன் றானதென் றாடாய்கழ
லேகாந்த மானேமென் றாடாய் கழல். (௨)

மூன்றுகாண் பெண்ணே முடிவான மண்டில
மூத்திக்கு வித்தாமென் றாடாய் கழன்
மூன்றிலா வீசதென் றாடாய்கழல். (௩)

நாலுகாண் பெண்ணே நாடினு னாடியுன்
னதமே சோதியென் றாடாய்கழ
லிம்மை யுணர்ந்தோமென் றாடாய்கழல். (௪)



அஞ்சுகாண் பெண்ணே யறிவே நமக்கென்றுந்
தஞ்சமாய் நின்றதென் றாடாய்கழ
றானே தானானதென் றாடாய்கழல். (௫)

ஆறுகாண் பெண்ணே யல்லல் கழிந்தபின்
னனந்த மானோமென் றாடாய்கழ
லாசை யொழிந்தோமென் றாடாய்கழல். (௬)

ஏழுகாண் பெண்ணே யெல்லா நிலைகளு
மிந்திர ஞாலமென் றாடாய்கழ
லெமக்கழி வில்லையென் றாடாய்கழல். (௭)

எட்டுகாண் பெண்ணே கற்றக் குறா மென்னுங்
கட்டதை விட்டோமென் றாடாய்கழல்
காணாது கண்டோமென் றாடாய்கழல். (௮)

ஒன்பதாம் பெண்ணே யுள்ளே தெளிந்தபின்
மின்போலும் போதமென் றாடாய்கழல்
வேத முடிவதென் றாடாய்கழல். (௯)

பத்துக்காண் பெண்ணே பரமேபரமாகப்
பற்றற் றிருந்தோமென் றாடாய்கழல்
பத்தி முடிவதென் றாடாய்கழல். (௧௦)

ஆடுங் கழலா மடியி லொளித்தக்காற்
றேடுவ தில்லையென் றாடாய்கழ
றிருவடி யல்லதென் றாடாய்கழல். (௧௧)

கழல் முற்றுப்பெற்றது.

பாடுதுறை முற்றும் - முற்றுப்பெற்றது.

# அட்டவணை.